# சங்கத் தமிழிலக்கியக் காட்சிகள்

புலவர் சி. முருகேசனார்
தமிழ் ஆசிரியர்
முத்தியாலுப்பேட்டை உயர்தரப் பள்ளி
சென்னை-1.



SINCERE PUBLISHING COMPANY

# சங்கத் தமிழிலக்கியக் காட்சிகள்



ஆசிரியர் :

புலவர். சி. முருகேசனார்,

தமிழாசிரியர்,

முத்தியால்பேட்டை உயர்நிலைப்பள்ளி, சென்னை.

தி சின்சியர் பப்ளிஷிங் கம்பெனி,

13/14, சகெண்ட்லைன்பீச், சென்னை-1.

பதிப்புரிமை ]　　1956　　[ விலை ரூ. 0-14-0

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜெயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்கிய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே



## தேசிய கீதம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிறவனே! மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்!
நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக்கிளர்ச்சியடையச் செய்கிறது
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
. யமுனை கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது,
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது
அவை நின் ஆசியை வேண்டுகின்றன, நின் புகழைப் பாடுகின்றன.
இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

# முன்னுரை

'சங்கத் தமிழ் இலக்கியக் காட்சிகள்' என்னும் பெயர் தாங்கி வெளிவரும் இந்நூலில் சிறப்பு வாய்ந்த சங்க காலத்துத் தமிழ் மன்னனாகிய 'தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை' என்னும் மன்னனைப் பற்றியும், அவன் மோசிகீரனார் என்னும் புலவரிடத்துக் கொண்டிருந்த மதிப்புப் பற்றியும் விளங்கக் காணலாம். அதற்கு அடுத்தபடியாக நட்பிற் சிறந்த நல்லோர் இருவராகிய பிசிராந்தையார், கோப்பெருஞ் சோழன் என்னும் இவர்களுடைய நட்புரிமை விளக்கப்பட்டுள்ளது. பாரி வேந்தனிடத்து நட்புரிமை கொண்ட கபிலர் வரலாறு மூன்றாவதாகவும்; பொதுநலமாகப் பல தொண்டுகள் புரிந்த கோவூர்கிழார் வரலாறு ஐந்தாவதாகவும் கூறப்பட்டுள்ளன. இங்குள்ள வரலாறுகள் பழந்தமிழ் நாட்டின் மக்கள் நிலை, மன்னர் ஆட்சி முறை, நாட்டின் நாகரிகம் புலவர் சிறப்பு ஆகியவற்றை நன்கு விளக்கப் பயன்படுவன. ஆதலின் தமிழ் நாட்டின் மேன்மையை விரும்பும் தமிழ் மக்கள் இதனைக் கற்பது இன்றியமையாத தாகும். தமிழ் மாணவர் உலகுக்குத் தமிழ்ப்புலவர் வரலாற்றோடு தொடர்புடைய அரிய கருத்துக்களை நல்குவதில் இந்நூல் இணையற்ற சிறப்புடையதாகும். இதனைக் கண்ணுறும் தலைமையாசிரியர்களும் தமிழாசிரியர்களும் இதனை மாணவர்க்குத் துணைப்பாட நூலாக வைத்துப் பயன்படும்படி செய்யக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,
ஆசிரியர்.

# பொருளடக்கம்

# செந்தமிழ் வளர்த்த சேரமன்னன்

செந்தமிழ் நாட்டிற் சீரிய பெருமையுடையதும் மலை வளங்களால் என்றும் வற்ருத பெருமையுடையதும் ஆகிய சேரநாட்டை இரும்பொறை என்னும் மன்னன் செங்கோலோச்சிப் பாதுகாத்து வந்தான். அவன் தகடூரை ஆண்ட மன்னன் ஒருவனேடு எதிர்த்துப் பொருது வெற்றி கொண்டதால் "தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை" என்னும் சிறப்புப் பெயர் பெற்ருன். அவன் போர்க்களத்துப் புகுந்து வெற்றி காணுவதேயன்றிப் புலவர்களுக்குப் பரிசில் அளிப்பதிலும், பின் வாங்காத பெருங் கொடை வள்ளல் ஆவான். எட்டுத் தொகை நூல்களுள் ஒன்ருக விளங்குவது பதிற்றுப்பத்து என்னும் விழுமிய நூலாகும். சேர மன்னர்களின் சிறப்பினை எடுத்துப் பேசும் செம்மை சான்ற அந்நூலின் எட்டாம்பத்தின் தலைவனுவான் இச்சேரல் இரும்பொறை. அந்நூலினை இயற்றிய அரிசில் கிழார் என்னும் புலவர் அன்பளிப்பாக ஒன்பது நூருயிரம் காணம் பரிசில் பெற்ருர். (காணம்—ஒருவகைப் பொன் நாணயம்.) அக்காலத்துப் புலவர்கள் பெற்ற பெருஞ் சிறப்பினை என்னென்று புகல்வது. படை மடம் படாமையும், கொடை மடம ப( ழும் மன்னர்க் கணியாகும்.

இம்மன்னன் காலத்து மோசிகீரனுர் என்னும் புலமை சான்ற நல்லோர் ஒருவர் இருந்து வந்தனர். அவர் "ஒரு நாட்டின் மக்களுக்கு நெல்லும் நீரும், உயிராகா. மன்னன் ஒருவனே மக்களின் உயிராவான். மன்னனுடைய செங்கோல் ஆட்சிமுறை இல்லாத போது அந்நாட்டில் எவ்வகைச் செல்வ வளங்கள் நிறைந்திருப்பினும் பயனின்றி வீணுகும். செங்கோல் ஆட்சி சிறந்த

முறையில் உள்ள நாட்டில் மக்கள் அமைதியோடு வாழ்வார்கள். ஆதலின் மன்னன் தன்னை மக்களின் உயிரென்று கருதி வாழ வேண்டுவது இன்றியமையாச் செயலாகும்" எனக் கூறியுள்ளார். அதுவே வேந்தனுக்குக் கடமை என்பதையும் உணர்த்தியுள்ளார்.

சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை புலவர்பால் நிறைந்த அன்புடையவன், என்பதனை விளக்க அவன் வரலாறு முழுவதுமே சான்றாகும். ஆயினும் பின்வரும் ஓரினிய பகுதி கற்றோர் உள்ளத்தைக் கனிவிக்கும் மிக்க சிறப்பு வாய்ந்ததாகும். மோசிகீரனார் என்னும் புலவர் தமிழ்த் துறையில் சிறந்து விளங்கினர்; தம்முடைய கவி நலத்தால் வள்ளல்கள் பலருடைய உள்ளங்களையும் கவர்ந்து வந்தார். இயற்கை நலங்களையும், நாட்டு மக்களின் குறைகளையும், மன்னன் செய்ய வேண்டிய கடமைகளையும் தம் கவிகளிலே புனைந்து காட்டுவது அவர் இயல்பு. வாழ்க்கைக்கு வேண்டும் செல்வப் பொருளைப் பெரிதெனக் கருதாது கல்வி என்னும் அழியாத செல்வத்தையே கண்ணெனக் கருதிக் காத்து வந்தார். தம் வாழ்வின் இடையில் வறுமை வந்து வாட்டிய போதெல்லாம் வள்ளல்கள்பால் சென்று மானம் இழவாத மாண்போடு பொருள் பெற்று எளியோர்க்கும் ஈந்து தாமும் துய்ப்பது அவர் வழக்கம்.

வெய்யில் என்றும் மழை யென்றும் பாராது, கடு நடை நடந்து, மக்கள் நிலையை மன்னர்களுக்குத் தெரிவிப்பதும், மன்னர் செய்யும் குற்றங்களை எடுத்துச் சொல்லி அவர்களைத் திருத்துவதும் பண்பாகக் கொண்ட மோசிகீரனார் ஒரு நாள் கடுங்கோடை வெய்யிலில் வழி நடந்த களைப்பால் அரண்மனையை யடைந்தார்; மெல்லெனவீசிய தென்றற் காற்று அவருக்கினிமை பயந்தது, அக்காலத்து

மன்னர்களுடைய அரண்மனைகளில் முரசு அடிப்பது வழக்கம். முரசு, வாள் முதலியவற்றை மன்னர்கள் தெய்வங்களை வைத்து வழிபடுதல் போலத் தூய்மையான இடமொன்றில் வைத்துப் பாதுகாப்பர். அத்தகைய கடவுட்டன்மை பொருந்திய பொருள்களுக்குக் குற்றம் ஏதேனும் இழைப்பவர் மன்னனுடைய வாளுக்கு இரை யாவரே அன்றித் தப்பிப் பிழைத்தல் அரிதாகும். முரசு இருக்குமிடம் தூய்மையான பஞ்சணை மெத்தையால் இயன்று, நறுமண மலர் தூவப் பெற்றுப் பொலிந்து காணப்படும்.

## முரசு கட்டிலில் மோசிகீரனர் :

அரண்மனையுட் சென்ற புலவர்பெருமான் தம் மெதிரே காணப்பெற்ற முரசு கட்டிலை அண்மினர். அவ் வேளை முரசினை நீராட்டுவதற்காக மன்னருடைய பணி யாட்கள் வெளியே எடுத்துச் சென்றிருந்தனர். தம்முன் தோன்றிய முரசு கட்டிலின்மேல் பரப்பியிருந்த வெண் மையான பஞ்சணையும், மலரின் நறு மணமும். சோர்ந்து வந்த புலவர் உள்ளத்தைக் கவர்ந்தன. தம்மையும் அறி யாது சென்றார் புலவர்; செயலற்றுச் சாய்ந்தார்; உறக் கத்தால் கவரப்பட்டார். தம் வயமற்றுப் புலவர் அயர்ந்து தூங்கினர்.

தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையாகிய சேர மன்னன் அவ்வழியே சென்றவன் முரசு கட்டிலில் ஒருவர் படுத்திருப்பதைக் கண்டு சினமுற்றான். தெய்வத் தன்மை வாய்ந்ததும், மக்களால் தூய்மை கெடாதவாறு பாதுகாக்கப்படுவதும் ஆகிய முரசு கட்டிலில் அயலான் ஒருவன் அயர்ந்து தூங்குவதைக் கண்டு அடங்காச் சின முற்றான். உடைவாளை உறையினின்றும் எடுத்து அயலானுடைய தலையைத் துணித்து வீழ்த்துவதே தன்

கடனென உணர்ந்தான்; உருவியவாளை எடுத்துக் கொண்டு விரைந்து சென்றான். அயர்ந்து தூங்கியவருடைய முகத்தைக் கண்டதும் மன்னன் முகம் மாறினான்; வியந்தான்; தம்மால் போற்றப் பெற்ற புலவர் பெருந்தகை மோசிகீரனாரே அங்ஙனம் துயில்கின்றார் என்பதை உணர்ந்ததும் தவறு செய்ய நினைத்தோமே! என்று மன்னன் மனம் வருந்தினான். இப்புலவர் பெருந்தகை எவ்வளவு அயர்ந்து தூங்குகின்றார்! எவ்வளவு களைப்புற்றிருக்கின்றார். இவர்க்கு முன்னரே நாம் வேண்டுவன செய்யாது விட்டு விட்டோமே என்று நினைத்து வருந்தி, அருகே இருந்த வெண்கவரியைக் கையில் எடுத்து மெல்ல வீசினான்.

மெல்லிய பூங்காற்று உடலிலும், தம் முகத்திலும், பட்டதனால் அயர்ச்சி நீங்கிப் புலவர் கண் விழித்தார். தாம் இருக்குமிடம் யாது என்பதனை அறியாதவராய் அருகே வெண்கவரியுடன் நின்றவனை நோக்கினார். சேரமன்னன் இரும்பொறையே தமக்கு வெண்கவரி வீசுகின்றான் என்பதைக் கண்ட புலவர் பெருவியப்படைந்து விரைந்து எழுந்தார். மன்னனை நோக்கிப் பின்வருமாறு கூறலானார்.

*புலவர் மன்னனைப் புகழ்தல் :*

“மயில் தோகையால் ஒப்பனை செய்யப்பட்ட முரசம், மண்ணி வருவதற்காகச் சென்ற வேளையில், எண்ணெய் நுரை போன்ற மெல்லிய பஞ்சணை பொருந்திய முரசு கட்டிலில் அறியாது ஏறிப்படுத்த என்னை இருதுண்டாக வெட்டி வீழ்த்தாது விடுத்தனை; அஃது ஒன்றே நீ! தமிழ் முழுதும் அறிந்த பெருமைக்குச் சான்றாகும். அதனோடு அமையாது அணுகி வந்து உன்னுடைய வலிமையுடைய கரங்களால் கவரி வீசித் தண்ணெனப் பூங்காற்று என்

முகத்தில் தவழும்படி செய்தாய். இவ்வுலகத்தில் கமழு மாறு புகழ் பரப்பாதார் அவ்வுலகத்தில் இன்பம் அடை யார். என்பதனை அறிந்தாய் போலும்" என்று புகழ்ந் தார்.

மன்னன் பெருஞ்சேரல் இரும்பொறை புலவர்பால் வைத்த பேரன்பினையும், தமிழ் நன்கு அறிந்த சிறப்பினை யும், குற்றம் செய்த புலவர்க்கும் அவன் தண்ணளி புரியும் தன்மையினையும் வியந்து ஒரு செய்யுள் இயற்றினார். அதுவே சங்க இலக்கியமாகிய புறநானூற்றின் (50-ஆவது) செய்யுளாகப் பொலிந்து நிற்கின்றது.

"செந்தமிழை வளர்க்கும் செம்மல்களாகிய மன்னர் கள் தமிழ் நூல்களைக் கற்ற சான்றோர்களைப் பாதுகாத்து வந்தார்கள் என்பதனை இந்த வரலாற்றால் அறியலாம். தமிழ்ப் புலவர்களைப் பாதுகாத்தல் தமிழைப் பாதுகாக்க விரும்பும் மன்னர் செய்யத்தக்க செயல் என்பதும் அறி கிறோம்.

"ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா(து) அவருள்
அறிவுடை யோன் ஆறு அரசுஞ் செல்லும்"

என்ற செய்யுளிற் கூறியது போல அரசர்கள் அறிவுடைய வர்களை விரும்பிப் போற்றுதல் அறிவுடைய செயலாகும்.

# நட்பிற் சிறந்த நல்லோர் இருவர்

உலகில் வாழும் மக்கள் நலம் பெற்று ஓங்க வேண்டு மாயின் ஒருவர் மற்றவர்க்கு நன்மை செய்து வாழ்தல் வேண்டும். மக்கள் தனித்து வாழும் இயல்பினரல்லர்; சிறு சிறு குழுக்களாகவேனும் கூடியே வாழும் இயல் பினர் ஆவர். மக்கட் கூட்டம் வளர்ச்சியடைவதையே முற்கால அறிஞரும் விரும்பினர்; இக்கால அறிஞரும் விரும்புகின்றனர். மக்கள் தங்கள் அறிவையும், வாழ் வையும் மேலும் மேலும் வளர்க்க முற்படுகின்றனர்.

ஆறறிவு படைத்த மக்கள் தங்கள் ஆராய்ச்சியினால் தங்களை மேலும் வளர்த்துக் கொள்ளவே ஆசைப்படுகின் றனர். "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறை யும், தெய்வத்துள் வைக்கப் படும்" என்பது வள்ளுவர் வாக்கு. இவ்வுலகத்து அறிவு வாழ்க்கையை மேலும் வளர்த்துக் கொள்பவன் பலரும் போற்றும் தெய்வப்பண் பினை யடைவான். ஆதலால் அத்தகைய மேன்மையை யடைய விரும்புகின்றவர் தமக்கு ஒரு துணைவரை நாடு தல் இயல்பு. தம்முடைய அறிவுக்கும் செயலுக்கும் மேலும் மேலும் ஆதரவு நல்கித் தம்மை வளர்ப்பவன் நண்பனே ஆவான். செயல் மேற்கொள்ளாது சோம்பி இருக்கும் வேளையிலும், செயலை மேற்கொண்டபோது இடையூறுகளால் மனம் கலங்கி இருக்கும் நேரத்திலும் தேறுதல் கூறி அச்செயலை முடித்து வைப்பவன் சிறந்த நண்பனே ஆவான்.

இத்தகைய நட்பு வளர்வதற்கு அடிப்படையான கார ணங்கள் செல்வம், செல்வாக்கு, பதவி, பட்டம் முதலியன எனக் கருதலாகாது. இருவர்க்கும் நேர்ந்த கருத்தொற் றுமையே நட்பின் வளர்ச்சிக்குக் காரணமாகும். ஒரு

குடியிற் பிறந்த இளைஞர் இருவர் தம்முள் மாறுபட்டு இருந்தாலும் கள்வர் முதலிய அயலார் தம் இல்லினுட் புகுந்து களவிடும்பொழுது பார்த்து வாளாவிருப்பரோ? தம் குடியைக் காக்க வேண்டும், என்ற ஒருமைக் கருத் துண்டாகி அக்கள்வனைப் பிணித்தலில் ஒற்றுமையடை வாரன்றோ? அங்ஙனமே நண்பர் இருவர் இன்றியமை யாத ஒரு கருத்தை மேற்கொண்டு வாழ்வார்கள். அஃது நாளடைவில் முதிர்ந்து முதிர்ந்து வளர்ந்து கருத்தோடு மட்டுமன்றி நண்பனைப் பாதுகாத்தலிலும் துணைசெய்யும்.

கபிலரும் பரணரும், ஔவையும் அதிகமானும், பிசிராந் தையும் கோப்பெருஞ் சோழனும் போன்றார் சிறந்த நண்ப ராக வாழ்ந்தவர்களாவர். இங்ஙனமாகிய நட்பு ஒருவரை யொருவர் நெருங்கிக் கலந்து பழகுவதால் வளரும் தன் மையுடையதாகும். "கேளாத கடனும் ஆடாத உறவும் பாழ்" என்பது பழமொழியன்றோ? அங்ஙனம் இருப்பி னும் கலந்து பழகாமல் உணர்ச்சி வயத்தால் ஒற்றுமை யுடைய நண்பர் இருவர் வேறு வேறு நாடுகளில் இருந் தாலும் உயரிய நண்பராதலுங்கூடும் எனத் திருவள்ளு வர் கூறுகின்றார்.

> "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும்"

என்பது அவர் எடுத்துக் கூறும் செம்மை சான்ற நல் லுரையாகும்.

சங்க இலக்கியத்தில் பழமை சான்ற புறநானூற்றில் இதற்கோர் எடுத்துக்காட்டு உண்டு. செந்தமிழ் நாடு என்று சிறப்பித்துக் கூறப்படும் பாண்டி நாட்டில் பிசிர் என்பது புகழ் வாய்ந்த ஓர் ஊராகும். ஆந்தையார் என்ற செந்தமிழ்ப் புலவர் தோன்றி அவ்வூருக்கு மேலும் சிறந்த புகழை அளித்தார்.

ஆந்தையார் இளமையிலேயே தாம் பிறந்த குடியின் பெருமையைக் காக்கும் நல்லியல்பு வாய்க்கப் பெற்றிருந்தார். கற்றற்குரிய கல்விகளை மனம் உவந்து கற்ருர். சிறந்த பெரியோர் கூறிய நல்லுரைகளைக் கேட்டுத் தம் அறிவை மேலும் வளர்த்துக் கொண்டார்.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"
"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை"

எனத் திருவள்ளுவர் கூறிய நல்லுரைக் கேற்பக் கேள்விச் செல்வத்தை மேலும் மேலும் வளர்த்துக் கொண்டார். இல்லறமாகிய நல்லறமே சிறந்ததெனக் கண்டு தம் வாழ்க்கைக்குத் துணையாக மங்கை நல்லார் ஒருவரை மணந்து கொண்டார். மனைமாட்சியுடைய இல்லாள், தன் கணவருடைய வரவுக்குத் தக்க செலவே செய்யும் நற்பண்பு வாய்க்கப் பெற்றிருந்தார். தன் கொழுநனைப் பாதுகாத்து வந்த விருந்தினரை இன்முகம் காட்டி வரவேற்றுப் பேணும் மாண்புடையவராக அவர் விளங்கினர்.

காதல் இருவர் கருத்தொருமித்து ஆதரவு பெற்று இருந்த இல்லறத்தின் பயனாக மக்கள் சிலர் தோன்றினர். பிசிராந்தையார் தம்முடைய இல்வாழ்க்கையில் செல்வமும் கல்வியும், அறிவும் அன்பும் கலந்திருந்தமையால் மனக் கவலை இல்லாத மாட்சியுடையவராய் வாழ்ந்தார். சான்றோர் பலரோடு கலந்து வாழும் வாய்ப்பும் அவ்வூரில் அவருக்கு எந்நாளும் வாய்த்திருந்தது.

அவர் காலத்தில் பாண்டிய நாட்டைப் பாண்டியன் அறிவுடைய நம்பி என்னும் மன்னன் ஆண்டு வந்தான். அவன் புலவரை மதித்துப் போற்றினன்; தாய் மொழியாகிய தமிழைத் தன்னுயிரெனக் காத்தான்; செந்தமிழிற்

சிறந்தோங்கிய புலவர்களை அழைத்துப் பரிசிலளித்து மகிழ்வித்தான்; தாய் மொழியாகிய தமிழைக் கற்றுப் புலமை எய்தினான். தமிழ் கற்றோர் வறுமையுற்று வாடாத படி பெரும் பொருள் அளித்துப் பாதுகாத்தான். தன்னை யொத்த செல்வரும் கல்வியில் மேம்பாடு அடைதல் இன்றியமையாதது என்பதனை எடுத்துக் கூறினான்; தானும் கல்வியிற் சிறந்த புலவர் போற்றும் பெருமையை அடைந்தான். பின்னர், செந்தமிழ் நடையிற் சிறந்த பாடல்களை இயற்றும் வன்மை வாய்க்கப் பெற்றான். அவன் இயற்றிய செய்யுள் ஒன்று புறநானூற்றில் காணப்படுகின்றது. அஃது கற்றோர்க்குச் சிறந்த மகிழ்ச்சியையும், உணர்ச்சியையும் ஊட்டுவதாகும். "மக்களாகப் பிறந்தவர் தக்காங்கு வாழ்ந்தாலன்றிப் பிள்ளைப் பேறு எய்தார். அறச்செயலும் நல்லெண்ணமும், பிறர் நலம் பேணும் பான்மையும் உள்ளவர்க்கே அறிவாற் சிறந்த மக்கள் பிறப்பர் என்பதும், வஞ்சனை உடையராய்ப் பிறர்க்குக்கேடு சூழ்வார்க்கு அறிவிற் சிறந்த பிள்ளைகள் பிறத்தல் அரிது என்பதும், அவ்வாறு பிறந்தவரும் நல் வாழ்வு எய்தார் என்பதும் பண்டைச் சான்றோர் கூறிய நூல்களால் நாம் அறியலாம். இது பற்றி யன்றே தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரும்

"தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும்"

எனக் கூறினார்.

மக்களொடு மகிழ்தல் :

"பலவேறு வகையான செல்வத்தைப் படைத்துப் பலரோடும் இருந்து உண்ணும் பெருஞ் செல்வராக ஒருவர் இருந்தாலும். சிறிய கால்களால் மெல்ல நடந்து தம் சிறுகையை நீட்டி, நெய்யிட்டஉணவைக் கையினாற்

பிசைந்தும், வாயிலிட்டுக் கௌவியும், உடம்பின்மீது பட உதறியும் பெற்றோரை இன்பத்தால் மயக்க மடையச் செய்கின்ற மக்களைப் பெருதவர்களுக்குத் தாம் வாழும் இவ்வுலகத்தின் பயன் உண்டாகாது"என்று அம்மன்னன் பாடியுள்ளான், ஆதலால் சிறந்த புதல்வர்களைப் பெருத மக்கள் இவ்வுலகில் வாழ்ந்தும் பயன் அடையாதவர்களே யாவர். இத்தகைய சிறந்த கருத்துடைய மன்னன் நாடு காத்தலில் சிறந்து விளங்கிஞன்.

*மன்னன் வரி வாங்கும் முறை :*

அவனுடைய நாட்டில் அரசியல் அதிகாரிகளால் குடி மக்களுக்குச் சில இடையூறுகளும் நேர்ந்தன. குடிமக்க ளிடத்தில் வரி வாங்கும்முறையில் அரசியல் அதிகாரிக ளால் மிகவும் கொடுமை விளைவிக்கப்பட்டன. குடிமக்கள் வருந்துவதை, அரசன் அறிதற்கு வாய்ப்பில்லாதபடி அதி காரிகள் செய்திருந்தனர்.அதனை அறிந்த பிசிராந்தையார் மன்னனுக்குத் தெரிவிக்கும் எண்ணம் கொண்டு விரைந்து சென்று பின்வரும் கருத்தமையச் செய்யுள் ஒன்று பாடிஞர் :

'மா' என்னும் அளவுடைய சிறிதளவு நிலத் தில் விளைந்த நெல்லை அறுத்துப் பக்குவம் செய்து யானைக்குக் கவளம் கவளமாக உண்ணும்படி கொடுத்தால் அது பல நாட்களுக்குப் பயன்படும். நூறுகாணி நிலமா யினும் யானை தனித்துச் சென்று நிலத்திலே இருக்கும் நெல்லை உண்ணத் தொடங்கிஞல், வாயிற்புகும் அள வைக் காட்டிலும் காலால் மிதித்துக் கெடுக்கும் அளவு மிகுதியாகும். அதுபோல அறிவுடைய மன்னன் நெறி முறையறிந்து மக்களிடம் வரி வாங்கிஞல் அந்நாட்டில் உள்ள மக்கள் கோடிக்கணக்கான பொருளைத் தேடிக் கொடுத்துத் தாங்களும் செல்வத்தால் வளர்ச்சியடைவார்

கள். அரசன் தானும் அறிவில்லாதவனாய், அறிவற்ற அமைச்சனையும் தன் துணையாகக் கொண்டு, அன்பினைக் கைவிட்டுக் குடிமக்களிடம் கடுமையாக வரி வாங்கினால் யானை புகுந்த விளைநிலம் போல இவ்வுலகம் கெடும். தானும் அப்பொருளை அனுபவிக்கமாட்டான்" என்பதாம். இக்கருத்தினைக் கேட்ட மன்னன், புலவரை வெறுக்காது அவருடைய பொருளுரையை விரும்பி ஏற்றுக் கொண்டான்; புலவர்க்குச் சிறந்த பரிசில் அளித்து மகிழ்வித்தான்.

நல்லிசைப் புலமை வாய்ந்த பிசிராந்தையார் பாண்டி நாட்டில் மாறா இளமையும் வளமும் பெற்று விளங்கி நின்ற அக்காலத்தில், சோழ நாட்டின் தலை நகரமாகிய உறையூரில் கோப்பெருஞ் சோழன் செங்கோல் முறை மாறாது ஆண்டு வந்தான். புலவர் பாடும் புகழுடையவனாய் விளங்கிய அம்மன்னனிடத்துப் புலவர் பலரும் நண்பு பாராட்டி வாழ்ந்தனர். பிசிராந்தையாரும் கோப்பெருஞ் சோழனுடைய வீரம், கொடை, புலவரைப் போற்றும் பண்பு முதலியவற்றைக் கேள்வியுற்று அவன்மீது அன்பு பாராட்டி வந்தார். சோழ மன்னனும் பிசிராந்தையாருடைய புலமையையும், அஞ்சாது எடுத்துரைக்கும் ஆற்றலையும் நாட்டு மக்களுக்குப் பொதுநலத் தொண்டராக இருக்கும் சிறப்பினையும் கேள்வியுற்று அவர்மீது மட்டற்ற நன்மதிப்புக் கொண்டான்.

சோழ நாட்டினின்றும் பாண்டிய நாட்டிற்கும் பாண்டிய நாட்டினின்றும் சோழ நாட்டிற்கும் சென்ற புலவர் முதலானோர் வாயிலாக ஒருவரை யொருவர் கேள்வியுற்று நட்பால் மேம்பட்டு விளங்குவாராயினர். புலவர் தம் பெயரைக் கோப் பெருஞ் சோழன் என்றும், மன்னன் தன் பெயரைப் பிசிராந்தையார் என்றும் ஒருவருக்கொருவர் மாற்றிக் கூறிக் கொள்ளும் அளவுக்கு நட்பு

வளர்ந்து இருந்தது. ஒரு நாள் மாலைப் பொழுதில் வானத்தில் பறந்து சென்ற அன்னச் சேவலைக் கண்ணுற்ற புலவர் அந்த அன்னப் புள்ளின் வாயிலாகத் தம்முடைய அன்பினைப் பின் வருமாறு வெளிப்படுத்துவாராயினர்;

"அன்னச் சேவலே! அன்னச் சேவலே! போர்க்களத்தில் வெற்றி காணும் ஒரு வீரனும், நாட்டினை நன்முறையில் பாதுகாக்கும் நற்காவலனும் ஆகிய மன்னனுடைய ஒளி முகத்தைப் போல ஒளி வீசும் சந்திரன் உலாவுகின்ற இம்மாலைக் காலத்தில் யாம் செயலற்று வருந்துகின்றோம். நீ குமரித்துறையில் அயிரை என்னும் மீனை வயிறு நிறைய விழுங்கி வடமலையாகிய இமயத்தை நோக்கிச் செல்லுகின்றாய். இடைவழியில் உள்ள சோழ நாட்டை அடைந்தால் கோழி என்னும் பெயரையுடைய உறையூரில் உயர்ந்த மாடங்களில் தங்கி, வாயில் காவலரிடம் கேளாதே அரண்மனையுட் புகுந்து, எங்கள் கோப்பெருஞ் சோழன் செவியாற் கேட்கும்படி 'யான் பிசிராந்தையின் தொண்டன்,' என்று கூறுவாயானால் மாண்பு மிக்க உன்னுடைய அன்புப் பேடையான பெண் அன்னம் அணியத் தக்க சிறந்த நல்ல அணிகலன்களை உனக்குத் தருவான்.

"அன்னச் சேவல்! அன்னச் சேவல்!
ஆடுகொள் வென்றி அடுபோர் அண்ணல்
நாடுதலை அளிக்கும் ஒண்முகம் போலக்
கோடு கூடு மதியம் முகிழ்நிலா விளங்கும்
மையல் மாலையாம் கையறு(பு) இனையக்
குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை ஆயின், இடையது
சோழநன் னாட்டுப் படினே, கோழி
உயர்நிலை மாடத்துக் குறும்பறை அசைஇ
வாயில் விடாது கோயில் புக் (கு)எம்

பெருங் கோச் சென்னி கேட்க 'இரும்பிசிர்
ஆந்தை அடையுறை' எனினே, மாண்டநின்
இன்புறு பேடை அணியந்தன்
நன்புறு நன்கலம் நல்குவன் நினக்கே''
[வென்றி - வெற்றி. மதியம் - சந்திரன். இனைய - வருந்த.
கோழி - உறையூர்.]

இங்ஙனம் அன்னத்தின் வாயிலாகச் சோழன் பெருமையையும் தமக்கும் அவனுக்கும் இருந்த தலையாய நட்பின் சிறப்பினையும் புலப்படுத்தலானர்.

மக்கள் மாறுபாடு :

உறையூரில் கோப்பெருஞ் சோழன் தன்னிகரற்ற தனிப் பெரு வேந்தனய் ஆண்டு வந்தனன். ஆயினும் அவன் மைந்தர் இருவரும் தந்தைக்குப் பகைவரான சிலர் சொற் கேட்டு மனநிலை மாறித் தந்தையோடு போர் செய்யத் துணிந்தனர்; தந்தை செல்வத்தைப் பெரிதெனப் பேணது புலவர்க்கும் வறியோர்க்கும் வாரி வழங்குதலைக் கண்டு வெறுப்புற்றனர். அரச பண்டாரத்தில் உள்ள செல்வமனைத்தும் செலவழிந்த பின் தாம் பொருளின்றி வாழும் நிலை ஏற்படுமோ என ஐயுற்றனர்; ஆதலால் தந்தையின் அரசைக் கைப்பற்றத் துணிந்தனர். தந்தையோடு மாறுபட்டு எழுந்து படை திரட்டினர். இதையறிந்த தந்தை கோப்பெருஞ் சோழன் தன்னுடைய பேராற்றலைத் தன் மக்கள் அவமதித்தனர் எனக் கருதித் தானும் போர் புரியத் துணிந்தான்.

புலவர் நல்லுரை :

இவ்வாறு தந்தையும் மைந்தரும் போர் தொடுக்கத் துணிந்த செயலை யறிந்த புல்லாற்றூர் எயிற்றியனர் என்னும் புலவர், தந்தையாகிய கோப்பெருஞ்சோழனுக்குச் சில நல்லுரை கூறுவாராயினர். 'போர்க்களத்தில் வெற்றி கொண்டு வெண்குடையால் நாட்டை நிழல்

காக்கும் வலிமை வாய்ந்த மன்னனே! உன்னோடு போர் புரியத் துணிந்த இவ்விருவரையும் நினைத்துப் பார்த்தால் இவர் உன் பகைவரும் அல்லர். நீயும் அவர்க்குப் பகைவன் அல்லன். சிறந்த யானைப் படையையுடைய மன்னனே, நீ உலகத்தில் புகழை நிலை நிறுத்தி விட்டு விண்ணுலகம் சென்றால் பின்னர் இவ்வாட்சிக்குட்பட்ட நிலம் யாருக்கு உரியதாகும்? அவர்கட்கே உரியதன்றோ? இன்னும் சொல்லக் கேள். புகழ் விரும்பும் மன்னனே, ஒருகால் நீ போர்க்களத்தில் தோல்வியுற்றால் உன்னைப் பழிப்பவர் மகிழும்படி நீ பழியையே ஏற்பாய். ஆதலால் நீ கொண்ட போர்ச் செயலை விடுத்து விரைந்து எழுவாயாக! உன்னுடைய உள்ளம் வாழ்க! அண்டினோரைப் பாதுகாக்கும் நின் முயற்சி நற் செயல்களைச் செய்வதில் ஓங்குக! வானுலகத்தில் உள்ள வானவர்கள் உன்னை விரும்பி எதிர் கொள்ளுமாறு நல்வினைகளைச் செய்வாயாக.'' என்று கூறினார்

***மன்னன் வடக்கிருத்தல் :***

புல்லாற்றூர் எயிற்றியனாருடைய மொழிகளைக் கேட்ட மன்னன் சினம் மாறினான். பின்னர் இவ்வுலக வாழ்வின் மீதும் வெறுப்புற்றான். நல்லோர் பலர் சூழ இருந்து நன்னெறிகளையே பின்பற்றி நன் மொழிகளைக் கேட்டு வந்த மன்னன், தன் மக்கள் தவறான வழியில் நாட்டைக் கவரத் துணிந்த செயல் தன்நெஞ்சைச் சுட்டதனால், அப்புன்மக்கள் முகத்திலும் விழித்தல் கூடாது என எண்ணி வடக்கிருந்து உயிர் விடுதலே இனிச் செய்யத்தக்கது எனத் துணிந்தான். வடக்கிருத்தல் என்பது பண்டைக் காலத்து அறிஞர் மேற் கொண்ட ஒரு செயல். இவ்வுலக வாழ்வில் பற்றற்றவர்களும் வெறுப்புற்றவர்களும் மறுபடியும் பிறவாமையை வேண்டி உண்ணாநோன்பு

மேற்கொண்டு இறைவனை நினைந்து வடக்கு முகமாகப் பல நாள் இருந்து உயிரை நீப்பர். அவ்வாறே இக் கோப் பெருஞ் சோழனும் வடக்கிருக்கத் துணிந்தான். அவனுக்குச் சிறந்த நண்பர்களாயிருந்த புலவர் பலரும் அரசனுடைய பிரிவாற்ருமையைக் கருதித் தாமும் அவனுடன் வடக்கிருக்க எண்ணினர்.

பாண்டி நாட்டில் இருந்த பிசிராந்தையார் இந் நிகழ்ச்சிகளைத் தம் உணர்ச்சி வயத்தால் அறியப் பெற்ருர். தாமும் கோப்பெருஞ்சோழன் இருந்த இடத்தை யடையப் புறப்பட்டார். உணர்ச்சியால் உண்மையுணர்ந்த சோழனும் தன்னருகில் இருந்த புலவர்களை நோக்கி என்னுடைய இன்பக் காலத்தில் பிசிராந்தையார் வராதிருப்பினும் இத்துன்பக் காலத்தில் வாராமல் இரார். அவருக்கும் இங்கு இடம் ஒழித்து வையுங்கள் என்று கூறினன். அவ்வாறு மன்னன் கூறிய கூற்றுக்குச் சிறிதும் மாருது பிசிராந்தையாரும் விரைவில் அவ்விடத்தை வந்தடைந்தார். மனமொத்த சோழனும் புலவரும் ஒருவரை யொருவர் மார்புறத்தழுவி அன்பு பாராட்டினர்.

இச் செயலைக் கண்ணுற்ற புலவர் பெரிதும் வியந்து, பொன்னும், பவழமும், முத்தும், மாணிக்கமும் பல நெடுங் காதத்திற்கப்பால் பல்வேறு இடங்களில் பிறந்தாலும், அரிய விலையுடைய சிறந்த ஆபரணத்தைச் செய்யும் பொழுது அவையனைத்துமோரிடத்தை அடைவது போல என்றும் சான்ருேர், சான்ருேர்களையே சேர்ந்து வாழ்வார்கள். சால்பில்லாதவர், சால்பில்லாதவரையே சேர்வர். என்ற கருத்தமையுமாறு :

"பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினும் தொடைபுணர்ந்(து)

அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றி யாங்கு என்றும்
சான்றோர் சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே" (புறம்)

என்னும் செய்யுளைக் கூறினர்.

*நரையின்மைக்குக் காரணம் :*

ஆங்கிருந்த புலவர் பெருமக்கள் பிசிராந்தையாரைக் கண்ணுற்று அவர்பால் நரை, திரை, முதலிய மூப்புக் குரிய குறிகள் சிறிதும் இல்லாமையை எண்ணி வியந்து, அதற்குரிய காரணம் யாதென வினவினர். புலவர், திலக மாகி அவண் போந்திருந்த பிசிராந்தையார் பின்வருமாறு விடையளித்தார். "யாண்டுகள் பலவாகியும், நரையின்றி இருப்பதற்குக் காரணம் என்னை யென்று என்னைக் கேட் கின்றீர்கள். அதற்குரிய காரணங்களைக் கூறுகின்றேன். என் மனைவியும் மக்களும் அறிவு நிரம்பப் பெற்றவர் களாய் நற்குண நற்செயல்களில் சிறந்து விளங்குகின்ற னர். என் பணியாட்களும் என் கருத்துக்கு மாறுபடாது மனமொத்துப் பணிபுரிகின்றனர். என் நாட்டு மன்னனும் குடிமக்களுக்குச் சிறிதும் தீங்கிழைக்காதவனாய்ப் பாது காக்கின்றான். அதற்கு மேலும் யான் வாழும் ஊரின்கண் அறிவால் நிரம்பி ஐம்பொறிகளும் அடங்கப் பெற்ற சான்றோர் பலர் வாழ்கின்றார்கள். அவர்களோடு இடை யறாது பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்துள்ளது. இவையே நரையின்மைக்குக் காரணங்களாம்," எனக் கூறி ஆங்கிருந்த புலவர் பெருமக்களை மகிழ்வித்தனர். இத்தகைய பண்பு மேம்பட்ட புலவர் தம் முயிரினும் இனிய நண்பனாகிய கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த எல்லையைத் தாமும் அடைந்து, வடக்கிருந்து உயிர் விட்ட இஃதன்றோ உண்மை நட்பு ஆகும். நட்புக்குயிர் விட்ட நல்லோர் புகழ் என்றும் நிலைத்து வாழ்க.

# 3. கற்ருேர் புகழும் கபிலர்

செந்தமிழ்ப் பாண்டிநாட்டில் புகழ்மிக்க புலவர்களால் பாடப்படும் சிறப்பு வாய்ந்த வைகையாற்றின் கரையின் ஒருபால் அமைந்தது திருவாதவூர். அத் திருப்பதி மாணிக்கவாசகர் என வியந்து பாராட்டப் பெறும் சிவனடியார் தோன்றி வளர்ந்த சிறப்புடையது. ஆதலால் மணிவாசகப் பெருமானுக்கு வாதவூரடிகள் என்ற பெயரும் உண்டு. அத்தகைய பதியில் அந்தணர் குலத்தில் கபிலர் என்னும் புலவர் பெருமான் இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட சங்ககாலத்தில் பிறந்தார்.

## இளமைப் பருவம் :

'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கேற்ப அவர் இளமைப் பருவத்திலேயே கல்வியிற் சிறந்த கருத்துடையவராயும் வேளாண்மையும், தாளாண்மையும் உடையவராயும் இருந்தனர்.

> தீயவை தீய பயத்தலால் தீயவை
> தீயினும் அஞ்சப் படும்.—(திருக்குறள்)

என்ற செய்யுளிற் கூறியாங்கு தீய பண்புகள் யாவும், சேராது நல்லொழுக்க முடையவராய், ஆசிரியரிடத்து அன்புடையவராய், தீயவர்களோடு சேராது, நல்லார் இணக்கம் உடையவராய் வளர்ந்து வருவாராயினர். கல்வியில் இடைவிடாக் கருத்திருந்தமையால் இளமையிலேயே சிறந்த தேர்ச்சி பெற்று விளங்கினுர்.

## தமிழ்ச் சங்கத் தொடர்பு :

சோழநாடு, தொண்டைநாடு, சேரநாடு முதலிய பிற நாடுகளையும் காணவேண்டு மென்னும் அவாவாலும்

அந்நாடுகளில் உள்ள காவிரி முதலிய ஆறுகளில் நீராட வேண்டும் என்னும் விருப்பத்தாலும், சிறந்த தலங்களைக் காணவேண்டு மென்னும் விழைவாலும் தாம்பிறந்த திருவாதவூரினின்றும் புறப்பட்டுச் சென்றார். அவ்வாறு சென்றவர் பல்வேறு இடங்களையும் கண்டு இறுதியில் தம் பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரைமா நகரத்தையடைந்தார். மதுரையில் சிறந்தோங்கி விளங்கிய தமிழ்ச் சங்கப் புலவர் சிலரோடு பழகும் வாய்ப்பும் பெற்றார். அக்காலத்து மன்னரும் மக்களிற் பெரும்பாலோரும் தமிழ் மொழியினிடத்து நீங்காத அன்பும் தமிழ்ப் புலவர்களை ஆதரித்துப் பாராட்டுவதில் விருப்பமும் கொள்வதைக் கண்டு மகிழ்வாராயினர் அதனால் தாமும் சிறந்த கவிகளை இயற்றிப் பரணர், கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் முதலிய புலவர்களுக்குப் படித்துக் காண்பித்து மகிழ்வித்தார். "தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு, காமுறுவர் கற்றுணர்ந்தார்." என்ற பொய்யா மொழிக் கிணங்க, தாமின்பம் அடைவதற்குக் காரணமான கல்வியைக் கண்டு உலகத்தார் மகிழ்ச்சியடைதலால், கபிலர் மேலும் மேலும் நூல்களைக் கற்றும் செய்யுட்களை இயற்றியும் புலவர்களை மகிழ்வித்து, அவர்களால் பாராட்டப் பெற்றும் வந்தனர்.

பின்னர் அப்புலவர் பெருமக்கள் இவரைப் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்து தங்களோடு ஒப்பச்சங்கப் புலவராகச் சேர்த்துக் கொண்டனர். சங்கத் தலைமைப் புலவரான நக்கீரர் "பலர் புகழ் நல்லிசை வாய் மொழிக் கபிலன்" என்று புகழ்ந்தார். வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்" என்றும் "பொய்யா நாவிற் கபிலன்" என்றும் சங்கப் புலவர்கள் பாராட்டுவாராயினர்.

ஆரியமன்னன் பிரகதத்தன் :

கபிலர் சங்கப் புலவரானபின் தமிழ் அறியாதோர்க்கும் அறிவுறுத்தும் செயலை இடையிடையே மேற்கொள்வா ராயினர். அக்காலத்துப் பாண்டிய மன்னனால் ஆரிய நாட்டுப் பிரகதத்தன் என்னும் மன்னன் ஒருவன் போர் முகத்திலே கைப்பற்றப்பட்டான். எனினும் அவன் பாண் டியனிடம் அன்பும் நன்றியும் உடையவனாய் இருந்தான். அதனால் பின்னர் அவன் பாண்டிய மன்னனுடைய ஆத ரவில் பாண்டியர் தலைநகரமாகிய மதுரையில் வாழ்ந்து வந்தான். தமிழ் நூல்களை இடையிடையே புலவர்கள் கூறக் கேட்டு மகிழ்ந்தான். தமிழ்ச்சுவை நுகர்ந்த அவன் தமிழ் மொழியைக் கற்க விரும்பினான். அவ்வாறு கற்றுவரும் பொழுது இடையிலே அவனுக்கு ஒரு ஐயம் உண்டாயிற்று. ஆரிய மொழியின் சிறப்பினை முன்னரே அவன் நன்கு அறிந்தவன். ஆதலின் தமிழைச் சிறிது கற்ற அளவிலே அதனிடத்து உள்ள பெருமையை அறி யாது, தமிழ் ஆரியத்திற்குச் சமமாகுமோ என்று ஐயுற் றான். இதனை அறிந்தார் கபிலர்; ஆரிய அரசன் பிரக தத்தனுக்குத் தமிழ் மொழியில் உள்ள சிறந்த கருத்துக் களையும், சொல் நயம் பொருள் நயங்களையும், எம்மொழி யிலும் இல்லாத அகப்பொருள் கருத்துக்கள் தமிழ் மொழி யில் அமைந்திருத்தலையும், குறிஞ்சி முதலான ஐந்து திணைகளிலும் உள்ள நல்லியல்புகளையும் எடுத்து விளக் கிக் கூறினார். கபிலர் அவனுக்கு அன்று தொட்டுத் தமிழ் மொழியைப் போதித்து வருவாராயினர். நாள் தோறும் தமிழ் நூல்களைக் கேட்டுச் சுவை நுகர்ந்து வந்த மன் னன் முடிவில் தமிழ் மொழி உயர்தனிச் செய்மொழி என்பதனையும், தொன்மையும், மேன்மையும், உடையது என்பதனையும்,அறிஞர்க்கு வற்றாத ஊற்றாயிருந்து அறிவு நலம் நல்க வல்லது என்பதனையும், பிறமொழியின்

தொடர்பு இல்லாமலே தனித்து இயங்கும் ஆற்றலுடையது என்பதனையும், பலவேறு கலைகளையும் எளிதில் உணரத்தக்க கலைச்சொற்களை ஆக்கிக் கொள்வதற்கு அடிப்படை உடையது என்பதனையும், மக்கள் வாழ்வில் இனிமை தரும் மொழி என்பதனையும், நன்கு அறிந்தான் அதனால் இடைவிடாது தானே பல நூல்களையும் எடுத்துக் கற்று ஆசிரியர் கபிலர்பால் ஐயங் கேட்டுத் தீர்த்துக் கொண்டான். அதனால் தானே புதிய செய்யுட்களை அருங் கருத்துக்கள் அமையுமாறு இயற்றும் ஆற்றல் பெற்றான். இத்தகைய தமிழ்த் தொண்டு புரிந்த கபிலர் இயற்கையிலேயே தமிழைத் தன்னுயிரெனப் போற்றும் தன்மையுடையவராய் இருந்தார்.

**புலவர் வறுமைக்குக் காரணம் :**

கபிலர் வாழ்ந்த சங்க காலத்தில் மூவேந்தர்களும், குறுநிலமன்னர்களும் பெருநிலக்கிழாரும் இருந்தனர். அவர்களிற் பெரும்பாலார் செந்தமிழ்ப் புலவர்களை வரவேற்று அவர்கள் கூறும் செவ்விய தீந்தமிழ்ச் செய்யுட்களைக் கேட்டு மகிழ்ந்து பரிசில் அளித்து மகிழ்வது வழக்கம். புலவரிற் சிலர் செல்வராகவும், மற்றுஞ்சிலர் வறிஞராகவும் இருந்தனர். அவற்றிற்குக் காரணங்கள் பல. புலவர் செல்வப் பொருளைப் பெற்றாலும் தாமே உண்டு வாழவேண்டும் என்னும் தன்னல எண்ணங் கொள்ளாது எல்லோர்க்கும் வாரி வழங்கி மகிழ்வார்கள். அதனால் அவர்களிடம் செல்வப் பொருள் நிலைத்திருப்பதில்லை. செல்வப் பொருளைக் காட்டிலும் கல்விப் பொருளே சிறந்தது என்ற எண்ணம் அவர்தம் உள்ளத்தில் உறுதிபெற்று நிலைத்திருந்தது. ஆதலின் தம் செல்வப் பொருளைப் பாதுகாத்து மேலும் மேலும் வளர்க்க எண்ணங் கொள்ளாது, கல்விப் பொருளின் மீதே கருத்தூன்றி நின்றனர். அதனாலும், அவர் செல்வம் அவர்பால் நிலைத்திராது மறைந்தது. மேலும்

புலவர்கள் தம்மை யொத்த புலவர் வறுமையால் வாடும் போது மனம் இரங்கிப் பெரிதும் மகிழ்ந்து செல்வப் பொருளை அவ்வறியபுலவர்க்கு அள்ளி வழங்குவர். இன்னோரன்ன பல காரணங்களாலும் புலவர் பலரிடம் செல்வம் நிலைத்திராது வறுமை நிலைத்திருப்பதாயிற்று. அவ்வாறன்றிப் புலவர் சிலருக்கு மன்னர்களும் வள்ளல்களும் ஆண்டு தோறும் அளித்து வந்த நன்கொடைகளால் பெரும் பொருள் நிலைத்திருத்தலும் உண்டு. மன்னர் புலவர்களுக்கு நாடுகளையும், ஊர்களையும், விளைநிலங்களையும், வேறுபல பொருள்களையும் அளித்த நிகழ்ச்சிகளை நூல்களிற் காணலாம்.

பெரும்பொருள் பெற்ற பெருமன்னர்கள் செல்வத்தின் மேல் வைத்த பெரு விருப்பத்தினல் ஓரளவே கொடுத்துச் சிறிதளவே புகழ் பெற்று வாழ்தலும் உண்டு. குறுநில மன்னராய வேளிர் போன்ருர் செல்வத்தைப் பெரிதெனக் கருதாது புலவர்க்கு வரையாது வாரி வழங்கி வள்ளல்கள் எனப் பெயர்பெற்று வாழ்ந்தனர். அங்ஙனமாய குறுநில மன்னர்களில் பறம்பு மலைக்குத் தலைவனுகிய பாரி வள்ளலும், பேகனுகிய பெரு வள்ளலும், முள்ளூர் மன்னன் காரியும், கொல்லி மலைக்குரியவனுகிய ஓரியும், நள்ளி என்னும் பெருங்கொடை வள்ளலும் வாழ்ந்து வந்தார்கள். செந்தமிழ் நாட்டில் சிறந்த கடை எழுவள்ளல்களின் புகழ் என்றும் நின்று விளங்குகின்றது. “மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே,” என்பது புறநானூற்றுப் பொன் மொழியாகும். இந்த வுலகம் நிலையாதது. நிலையாத இவ்வுலகத்தில் நிலைத்து நிற்பது புகழ் ஒன்றேயாகும், ஆதலால் நிலையில்லாத இவ்வுலகத்தில் நிலைத்து நிற்க விரும்பியவர் தம் அறச் செயல்களால் புகழை நிலைநாட்டிவிட்டுப் பின்னர்

மறைந்தனர் என்பது அதன் கருத்து. பெருஞ்செல்வம் படைத்த பெருமன்னர்கள் இருந்தார், வாழ்ந்தார், இறந்தார் என்பதைப் புலவர்களின் புகழ் மொழியாலன்றிப் பிறவற்றால் எளிதில் அறிய இயலாது. ஆதலால் இவ்வுலகத்தில் மக்கள் தம் வாழ்நாளில் தேடிக்கொள்ள வேண்டியது புகழ் ஒன்றேயாகும், இதனை உணர்ந்தவர் அறிவுடையோர்; உணராது தவறியவர் அறிவில்லார் ஆவர். ஆதலினால் குறுநில மன்னர்களில் ஒருவனாகிய பாரிவள்ளல் உயிர்களிடத்து மிகவும் இரக்கங் காட்டி நல்லுதவிகள் எல்லாவற்றையும் செய்து வந்தான்.

*பாரியின் நட்பு :*

பாரிவள்ளல் வரையாது வழங்குதலில் மேகத்துக்குச் சமமானவனாய் இருந்தான். ஒருநாள் அவன் தேரூர்ந்து சென்ற பொழுது வழியில் முல்லைக்கொடி யொன்று படர்தற்குக் கொழுகொம்பின்றித் தளர்ந்து வாடியது. அதன் வாட்டத்தைக் கண்டு உள்ளம் உருகினான் பாரிவள்ளல்; தான் ஏறிச் சென்ற பெரிய தேரை அவ்விடத்திலே நிறுத்தி, அதன் மீது முல்லைக்கொடியை எடுத்துப் படர விட்டான். இத்தகைய ஓரறிவு உயிராகிய தாவரத்தினிடத்தும் கருணை காட்டி இரங்கும் மனப்பான்மையைக் கண்டோ ரனைவரும் பெருவியப் பெய்தினர். கபிலர் இத்தகைய பண்பு மேம்பட்ட உள்ளம் படைத்த பாரியைக் கண்டு உவந்து உரையாட வேண்டும் என விரும்பினர். ஆதலால் கபிலர் தம் மதுரைமா நகரினின்றும் புறப்பட்டுப் பறம்பு நாட்டை நோக்கிச் சென்றார். புகழ் மிக்க புலவர்கபிலர் நற்குணங்களாலும், நற்செயல்களாலும், சிறந்து விளங்குகின்றார் என்பதனைப் பாரி வள்ளல் முன்னரே கேள்வியுற்றவனாதலின் கபிலரை வரவேற்று அவருக்கு வேண்டும் சிறப்புக்களை யெல்லாம் செய்தான். கபிலருடைய வருகை அவனுக்கு மிக்க மகிழ்ச்சியை

யளித்தது. கபிலரும், பாரிவள்ளலின் அருங்குணங்களை யும், கொடைச்செயல்களையும், அஞ்சாமையோடு கூடிய போராற்றலையும் கண்டு மகிழ்ந்தார். பறம்பு நாடு, குறிஞ்சி நிலமாகிய மலை நாடாதலின் அங்குக் காணப் பட்ட இயற்கை எழில்களையும் கண்டு களித்தார்.

குறிஞ்சி நிலத்து இயற்கை வளங்களை வருணித்துச் சிறந்த கவிகளைப் பாடினார். அச்செய்யுட்கள் மிக்க அழகு பொருந்தி இருந்தனவாதலின் இவரைக் 'குறிஞ்சிக் கபிலர்' என்ற புகழ் மொழியால், அறிஞர் புகழ்ந்தனர். கபிலர் பாரிவள்ளலுடைய அரும்பெறல் நண்பராகவும் அரசியல் முறைகளைக் கூறும் ஆய்வாளராகவும் விளங்கினார். அப் பாரிவள்ளல் மீதும் சிறந்த கவிகளை இயற்றினார். பின்னர் அப்பாரி வள்ளலிடத்து வந்து பழகும் இயல்புடைய வையாவிக்கோப் பெரும்பேகன், மலையமான் திருமுடிக்காரி முதலிய வள்ளல்களோடும் பழக்கமுண்டாயிற்று.

மலையமான் தொடர்பு :

திருவண்ணாமலைக்கு அண்மையிலுள்ள திருக்கோவ லூர் அக்காலத்து மலையமான் என்ற மன்னனுடைய தலை நகரமாய் இருந்தது. அது பெண்ணையாற்றங்கரையில் இயற்கை வளங்களோடு செறிந்து விளங்கிற்று. அந் நாடு மலையமான் என்னும் பெரு வள்ளலால் ஆளப்பட்டு வந்ததனால் புலவர்க்கு உறைவிடமாயும், தமிழ் மணம் கமழும் தண்ணறுஞ் சோலையாகவும் இருந்தது, மலைய மான் வள்ளல்களில் ஒருவன்; இரந்தோர்க்கு இல்லை யென்னாது ஈயும் பெருவண்மை யுடையவன். அவனைக் காணவேண்டு மென்னும் விருப்பத்தோடு கபிலர் மலையமானூடு நோக்கிச் சென்றார்.

கல்வியிற் சிறந்த கபிலர் தன்னை நோக்கி வருகின்ற செய்தியைக் கேள்வியுற்ற மலையமான் அவரை எதிர்

கொண்டு வரவேற்றுப் பலவாறு இன்முகங் காட்டிப் புகழ்ந்து பேசினன்; அவரை அழைத்துக் கொண்டு அரண்மனையுட் சென்று உணவு முதலியன அளித்து உபசரித்தான். கபிலர் மகிழ்ந்து பலநாள் அங்குத் தங்கி வாழ்ந்தார். மலையமான் திருமுடிக்காரியின் சிறப்புக்களையும், அவனுடைய கொடைத் தன்மையையும், புகழ்ந்து கபிலர் பல கவிகளை இயற்றினர். அவற்றுள் ஒன்றை ஈண்டுக்காண்போம்:

"மலையமான் திருமுடிக்காரியினிடத்துப் பரிசில் பெறச் செல்லும் புலவர்கள் நல்ல நாள் பாராது சென்றாலும், வழியிலே பறவைகளின் தீய நிமித்தங்கள் தடுத்தாலும், காலம் அல்லாக் காலத்துச் சென்று அவனைக் கண்டாலும், புகழ வேண்டிய இடத்து வெறுப்பூட்டும் மொழிகளைப் புகன்றாலும் தவறாது பரிசில் பெற்று வருவாரேயன்றி வெறுங்கையுடன் திரும்பி வரமாட்டார்கள்" என்பதே அச் செய்யுளின் கருத்தாகும். இனிச் செய்யுளைக் காண்போம் :

"நாளன்று போகிப் புள்ளிடைத் தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குந ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே" (புறம்)

இவ்வாறு மலையமான் திருமுடிக்காரியைப் பாடி, அவனோடு கலந்து மகிழ்ந்து பன்னாள் இருந்த பின்னர் தன்னுயிரினும் இனிய பாரிவள்ளலின் நட்பின் நினைவு தம் உள்ளத்தை ஈர்த்ததனல் மீண்டும் பறம்பு நாடடைந்து பாரிவள்ளலோடு மகிழ்ந்து உறைவாராயினர்.

## மூவேந்தர் முற்றுகை :

கபிலர் அங்ஙனம் உறையுங் காலத்துப் பாரிவள்ளல் செய்த அருஞ் செயல்களையெல்லாம் கண்டு மகிழ்ந்தார்; பாரியின் மகளிர் இருவர்க்கும் செந்தமிழ் நூல்களைக் கற் பித்து வந்தார். அறிவுக்கண் திறக்கப்பெற்ற மகளிர் இரு வரும் தாமே கவி இயற்றும் ஆற்றலும் பெற்றனர். இயற்கை வளங்களால் நிறைந்த பறம்புமலை புலவர் கூட் டத்தாலும் என்றும் பொலிவுற்று. விளங்கிற்று. பாரியின் புகழ் யாண்டும் பரந்து பெருகியது. ஏனைய மன்னரெல் லாம் இளமதியம் போலவும், பாரி ஒளி வீசும் பரிதி போல வும் புகழால் விளக்கமுற்றுத் தோன்றினர்.யாண்டுச் செல் லினும் பாரியின் புகழே யாவர் செவியிலும் ஒலித்தது. பெருநில மன்னர்களுக்கும் ஒருசில குறுநில மன்னர் கட்கும் பாரியின்மீது பொருமையும் உண்டாயிற்று. அக் காலத்து முடியுடை மூவேந்தரேயன்றி அவர் குடியிற் பிறந்து முடி பெருது குறுநில மன்னராய் இருந்தவரும் சிலர் உண்டு. அவர்களும் தம்மைச் சேர, சோழ, பாண்டி யர் எனவே கூறிக் கொள்ளுதல் வழக்கம். அவ்வாறு வேந்தர் குடியிற் பிறந்து விளங்கிய மூவரும் ஒருங்கு கூடிப் பாரியின் பறம்பு மலையை முற்றுகை யிட்டனர். பாரிவள்ளல் போருக்கு அஞ்சாதவனுயினும் மக்கள் உயிர் போரில் பயனின்றி மாள்வதை விரும்பவில்லை. ஆதலால் எதிரிட்டுப் போரிடுமாறு தன் படைகளை ஏவாது மலை யைப் பாதுகாக்குமாறு கட்டளை யிட்டான். மூவரும் பல நாள் முற்றுகை யிட்டனர். மதிலகத்து இருந்த மக்கள் பசியினல் வருந்தா வண்ணம் கபிலர் சிறந்த கிளிகளைப் பழக்கி மதிலுக்கப்பால் வெளியில் இருந்த வயல்களில் இருந்து நெற்கதிர்களைக் கொண்டு வருமாறு செய்து, அவற்ருல் அரணுக்குள்ளிருந்தோ ரனைவரையும் பாது காத்து வந்தார். பறம்பு மலையில் இயற்கையாய் விளையும்

பலா மரங்களில் இருந்து கிடைத்த பலாப்பழங்களையும், வள்ளிக்கிழங்கு, மூங்கில் நெல், மலைத்தேன், ஆகிய இயற்கை உணவுகளையும் பாரியின் படைவீரரும், அரணுக்குள்ளிருந்தோரும் உண்டு வந்ததனால் எத்தகைய துன்பமும் இன்றி வாழ்ந்து வந்தார்கள். பலநாள் முற்றுகையிட்டும் பயன் எய்தப்பெறாத மூவேந்தரும் இறுதியாகப் பாரியின் சினத்தை மிகுதிப்படுத்தி அவன் பொறுமையிழக்குமாறு செய்ய வேண்டும் என நினைத்தனர். அதனால் மூவேந்தரும் பாரிவள்ளலுக்குத் தூது அனுப்பித் தம் கருத்தைத் தெரிவித்தனர்; "பாரிவள்ளல் தம்முடைய மகளிர் இருவரையும் எமக்கு மணம் செய்து கொடுத்தால் இந்த முற்றுகையை நீக்கி விடுவோம்." என்று சொல்லியனுப்பினர். போர் முகத்தில் நின்று பெண் கேட்கும் செயல் பகைவரை அவமதித்தலாகும் ஆதலால், மானத்திற் சிறந்த பாரிவள்ளல் அடங்காச் சினம் கொண்டான்; தம் படைகளைப் பகைவர் மேல் ஏவினான். எனினும் இருதிறத்தாரும் வெற்றியோ, தோல்வியோ எய்தாது இடைப்பட்ட நிலையிலேயே இருந்தனர்.

கபிலர் அறிவுரை :

மன்னுயிர்க்கிரங்கும் இயல்புடைய புலவர் கபிலர் மூவேந்தரும் முற்றுகையிட்டிருந்த இடத்தை யடைந்தார். "பெருமை கொண்ட முரசினையுடைய மூவேந்தராகிய நீங்கள் எத்தனை ஆண்டு முற்றுகையிட்டாலும் இந்தப் பறம்புமலை உங்களால் பற்றுதற்கியலாததாகும். இந்த மலைக்கண் மூங்கில் நெல்லும், இனிய சுளையுடைய பலாப் பழங்களும், கொழுமையான வள்ளிக் கிழங்கும், தேனும் மிகுதியாக எக்காலத்தும் கிடைக்கின்றன. இவையே அன்றி, வானத்தின் மீன் கூட்டத்தைப் போன்ற நீர்ச் சுனைகள் பல இம்மலையினிடத்து உள்ளன. நீங்கள் பறம்பு நாட்டில் மரந்தோறும் கட்டக்கூடிய யானைத்திரளைக்

கொண்டு வந்தாலும், எல்லா இடங்களிலும் பரப்பப்பட்ட தேர்களையுடையவராக இருந்தாலும், உங்கள் முயற்சியால் அம்மலையைக் கொள்ளமாட்டீர்கள். உங்கள் வாளுக்கு அஞ்சி அவன் நாட்டையும் மலையையும் நல்க மாட்டான். அந்த மலையைக் கொள்ளும் விதத்தை யான் அறிவேன். முறுக்கப்பட்ட நரம்பினையுடைய சீரிய யாழைச் செய்து கொண்டு, மணம் வீசுகின்ற தழைத்த கூந்தலையுடைய உங்கள் விறலியர் பின் தொடர்ந்து வர, ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் செல்வீர்களானால் அவன் பறம்பு நாட்டையும் மலையையும் மகிழ்ச்சியினால் ஒரு சேரக் கொடுப்பன், என்ற அறிவுரையினை எடுத்துப் புகன்றார். அவர் மேலும், படைவன்மையுடைய வேந்தர்க்கு அஞ்சாது போரிடும் ஆற்றல் உடைவன் பாரிவள்ளல் என்பதனையும், ஆடல்பாடல்களில் வல்ல புலவர்க்கும் பாணர்க்கும். விறலியர்க்கும் எளிமையாய் நின்று, எப் பொருளையும் பரிசில் அளிக்க வல்லவன் என்பதனையும் குறிப்பிட்டார். அதன் பின்னர், கபிலர் அரணுக்குள் சென்றனர்.

மூவேந்தர் சூழ்ச்சி :

பகைவர் முற்றுகையையும். அவர் தன் மகளிரை மணம் செய்யக் கேட்ட சிறுமையையும் நினைத்து, முன்னரே சினமுற்றிருந்த பாரி வள்ளல் பகைவர் படையை யழிக்குமாறு போரிடத் தொடங்கினன். போர்க்களத்தில் சிங்கவேறு எனச் சென்று செய்த போரினைக் கண்ட பகைவர் அஞ்சிப் புறங்காட்டி ஓடினர். பின்னர், அவமானத்தால் அவதியுற்று எவ்வாறேனும் பாரியைக் கொல்ல வேண்டும் என நினைத்தனர். அதனால் வஞ்சனை வழியை மேற்கொண்டு மாறுவேடத்தோடு சென்று பாரியை எதிர்பாராத நேரத்தில் கொன்றனர். வஞ்சனை வென்றது. அறத்தின் உருவமாய வள்ளல் பாரி இம்மண்ணுலகை நீத்து விண்ணுலகை அடைந்

தான்; அடையுமுன் கபிலரை அழைத்துத் தம் மகளிர் இருவரையும் அடைக்கலமாகத் தந்து உயிர் நீத்தான். இதனைக் கண்ட கபிலர் ஆராத்துயருற்றார்; பறம்பு நாட்டின் பெருமையை நினைத்து வருந்தினர். புலவர்க்குப் பொன்றாத் துணையாய் இருந்த பாரிவள்ளலைக் கொன்றது புலவர்க்கெல்லாம் அளித்த தண்டனை போல் அவர்க்குப் புலப்பட்டது; வருத்த மிகுதியினால் தம் ஆராமையைப் புலப்படுத்திச் சில செய்யுட்களை இயற்றுவாராயினர்.

கபிலர் வருத்தம் :

"உலகம் முழுவதிலும் வறுமை புகுந்து வாட்டினாலும், பாரிவள்ளலுடைய நாட்டில் விளைவு மிகுதிப்பட்டுப் புதர்களில் எல்லாம் பூக்கள் மலரவும், ஆமா என்னும் விலங்குக் கூட்டம் தழைத்த புல்லை மேயவும் மழை தவறாது பெய்தது. சான்றோர் மிகுதியாகப் பெருகினர். இத்தகைய நன்மைகளுக்கெல்லாம் காரணம் பாரிவள்ளலுடைய செங்கோல் முறையாகும். அத்தகைய சிறப்புடைய பாரிவள்ளலை இழந்து யாம் எவ்வாறு உயிர் வாழ்வோம்" என்னும் கருத்தமைந்த செய்யுளை இயற்றினர்.

"பாரியின் மகளிராய இவர் இருவரும் தந்தை உயிரோடிருந்த காலத்துச் சோலைகளிலே மயில் தோகை விரித்தாடுதலையும் மலையுச்சிகளில் குரங்குக் கூட்டங்கள் தாவிப்பாய்ந்து விளையாடுதலையும், அக்குரங்குகள் சுவைத்துத் தம்மால் நுகரமுடியாது எஞ்சிப்போகுமாறு மரங்கள் காலமல்லாக் காலத்தும் பழங்களைத் தருதலையும்,வேறு பல புது வருவாய்களையும் கண்டு களித்து, அம்மலையின் மேல் ஏறித் தம்முடைய தந்தையின் அருமையறியாது போர் மேற் கொண்டுவந்த அரசர்களின் குதிரைகளை எண்ணி மகிழ்ந்தார்கள். இப்பொழுது முள்வேலியையும், பஞ்சு பரந்த முன்னிடங்களையும் உடைய சிறிய வீட்டின் அருகே

பீர்க்கங்கொடியும சுரைக் கொடியும் படர்ந்த இடத்தில் நின்றுகொண்டு, உமணர் செலுத்துகின்ற உப்பு வண்டிகளை எண்ணிக் கொண்டிருக்கின்றனர்கள். இவர்களுடைய எளிய இந்நிலையைக்கண்டு என்னுள்ளம் வருந்துகின்றது, என்னுடைய வாழ்நாள் இத்துன்பக் காட்சிகளைக் காணாது விரைவில் அழிந்து போவதாகுக" என்று வருந்திக் கூறினார்.

பின்னர் பாரிமகளிரை மணஞ்செய்து கொடுக்க வேண்டிய பொறுப்புத் தம்மைச் சார்ந்து இருத்தலின் ஒருவாறு உயிர் வாழ்ந்து இருந்தார். பாரிவள்ளல் வாழ்ந்த சிறப்பையும், அவனுடைய வள்ளல் தன்மையையும் அவன் வஞ்சனையால் கொல்லப்பட்ட நிலையையும் எண்ணி உள்ளம் உருகினார்.

## பறம்புமலையைவிட்டுக் கபிலர் நீங்குதல் :

கபிலர் இவ்வாறு பாரிவள்ளலின் வாழ்நாள் முடிந்ததை நினைத்து வருந்தி, அவன் புகழெல்லாம் மனத்தினால் நினைத்து, அப்பறம்பு நாட்டை விட்டு வெளியே செல்ல எண்ணங் கொண்டார்; பாரி மகளிர் இருவரையும் அழைத்துச் சென்று அவர்க்குத் தகுந்த சிறப்புடைய மன்னர்க்கு வாழ்க்கைப் படுத்த எண்ணினார்; அதனால் அவர்களை அழைத்துக்கொண்டு வெளியே செல்லத் தொடங்கினார்: அப்பொழுது பறம்பு மலையையும் நாட்டையும் பார்த்துப் பின்வருமாறு வருந்தியுரைத்தார் ;

"ஓ! மிகுந்த புகழையுடைய பறம்புமலையே ! பாரிவள்ளல் உயிரோடு இருந்த காலத்துச் சிறந்த உணவுகளை எமக்களித்துச் செல்வத்தினால் செழிப்புற்று எங்களுடன் நட்புப் பூண்டிருந்தாய். இப்பொழுது பாரி இறந்து விட்டானதலால் மனங்கலங்கிச் செய்வகை அறியாது அவன் மகளிர் இருவரையும் மணஞ் செய்தற்கு உடையவரைத்

தேடிச் செல்கின்றேன்; உன்னைத் தொழுது வாழ்த்திச் செல்கின்றேன். நீ வாழ்க! என்று கூறி அவ்விடத்தினின்றும் அகன்றனர். அவ்வாறு சென்று ஓர் இடத்தில் தங்கினர். கதிரவன் மேற்றிசையை யடைந்தான். பின்னர் முழுநிலா வானவெளியில் வெள்ளிய பால் போன்ற நிலவை வீசி ஒளியோடு விளங்கியது.

*பாரி மகளிர் வருந்தம் :*

பாரி மகளிர் அதனைக் கண்டனர்; சென்ற முழுநிலா நாளில் அந்த நில வொளியில் தம் தந்தையோடு மகிழ்ந்து தாம் இருந்த நிலையையும், இன்று தந்தையை இழந்து, நாடும் ஊரும் துறந்து, புலவரைத் துணையாகக் கொண்டு தனி வழி வந்திருப்பதையும் நினைத்து வருந்தினர்; உள்ளத்தில் ஊறிய வருத்தம் செய்யுள் வடிவில் வெளிவந்தது. "சென்ற திங்களில் அந்த வெண்ணிலவில் யாம் எந்தையையுடையோமாய் இருந்தோம். பறம்பு மலையும் பிறர் அடையாது எங்கட்கு உரித்தாய் இருந்தது. இந்தத் திங்களில் இந்த வெண்ணிலவில் எந்தையை யாம் இழந்தோம், எங்கள் பறம்பு மலையையும் பிறர் கைப் பற்றினர்" என்ற கருத்தமைந்த செய்யுளை இயற்றினர்.

"அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவில்
எந்தையு முடையேமெங் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெம்
குன்றுங் கொண்டார்யாம் எந்தையும் இலமே"

— புறம்

என்பதாகும்.

*பாரிமகளிர் திருமண முயற்சி :*

கபிலர் பாரிமகளிர் இருவரையும் அழைத்துக் கொண்டு விச்சிக்கோன் என்னும் அரசன் இருந்த

இடத்தை யடைந்தார். விச்சி என்னும் மலைக்குத் தலைவனாதலின் அவன் விச்சிக்கோன் என்று அழைக்கப் பட்டான்.

அவன் பாரிமகளிரை மணந்து கொள்வதற்கு உரிய தகுதியுடையவன் ஆதலால், அவனை நோக்கிக் கபிலர் பாரியின் பெருமைகளையும், அவனுடைய மகளிர் சிறப்புக் களையும், தான் பாரியின் நண்பராதலையும், பெண்ணைக் கொடுக்கத்தமக்கு உரிமை இருத்தலையும் விளக்கிச் சிறந்த தொரு கவியியற்றி அதன் மூலம் தாம் பரிசில் இரப்பார் போன்று பாரி மகளிரை மணந்துகொள்ளும்படி வேண்டு கோள் விடுத்தார். புலவர் நல்லுரையை மறுக்க விருப்ப மில்லாத விச்சிக்கோன் மூவேந்தருடைய பகை தனக்கு வரும் என்பதை நினைத்து மணம் செய்துகொள்ள விருப் பம் கொள்ளவில்லை.

பின்னர்க் கபிலர் பாரிமகளிரை அழைத்துக்கொண்டு இருங்கோவேள் என்னும் சிற்றரசன் இருந்த இடத்தை யடைந்தார். இருங்கோவேள் என்னும் சிற்றரசன் தமிழ்ப் பற்றும் புலவரைப் பாதுகாக்கும் நற்குணங்களும் பொருந் தியவன். அவனுக்குப் புலிகடிமால் என்பது ஒரு சிறப்புப் பெயர். சிறந்தபோர் வெற்றியினையும், பயிற்சிமிக்க படை களையும் உடையவன்; செங்கோல் முறையில் நாட்டைப் பாது காத்து வந்த சிற்றரசன். ஆதலால் அவனுக்குப் பாரிமகளிரை மணஞ்செய்து கொடுக்கக் கபிலர் விரும்பி னார். அதனால் பாரிமகளிரையும் உடனழைத்துச் சென்றார். அம்மகளிர் நற்பண்புகள் உடையவர் என்பதனையும், பாரி யின் தோழராகிய தமக்கு மகளிர் முறையினர் என்பதையும் கூறினார்; பின்னர் அம்மகளிரை மணஞ் செய்து கொள் ளும்படி வேண்டிக்கொண்டார். அவனும் மூவேந்தருடைய பகை தனக்குநேரும் என அஞ்சிப் பாரிமகளிரை மணக்க மறுத்துவிட்டான்.

### பாரிமகளிர் அடைக்கலம் :

கபிலர் மனம் வருந்திப் பாரிமகளிரை அழைத்துக் கொண்டு, பண்புகளால் நிறைந்து அடங்கிய கொள்கை யுடைய நான்மறையாளர் வாழ்கின்ற இடத்தை அடைந் தார்; பலவாறு சிந்தித்து அங்கிருந்த சான்ருேரிடம் பாரிமகளிரை அடைக்கலமாக இருக்கும்படி செய்தார்.

### கபிலர் சேர நாட்டை அடைதல் :

செல்வக் கடுங்கோ வாழியாதன் சிறந்த மலைநாட்டை யுடையவன்; பழங்களும். கிழங்குகளும் மற்றுமுள்ள விளை பொருள்களும் என்றும் குறைவில்லாது விளையும் செழிப்புமிக்க நாட்டினையுடையவன்; பொன், மணி முதலிய செல்வங்களும் நிறையப் பெற்றவன்; ஊக்கமும் அறிவும் உடையவன்; ஊக்கமும் அறிவுமே மக்களுக்கு இன்றி யமையாத செல்வமெனக் கருதும் சிறப்புடையவன். இத்தகைய பல்வேறு செல்வங்களைப் பெற்றவனுதலின் அவன் செல்வக் கடுங்கோ எனப்பட்டான். செல்வக் கடுங் கோவைக் காணவேண்டிக் கபிலர் மலைநாடு நோக்கிச் சென்ருர். மன்னன் புலவரை வரவேற்று மகிழ்வித்தான், அவனுடைய நற்குணங்களையும், கொடைத்தன்மையை யும், செங்கோல் முறையினையும், நேரில் கண்ட கபிலர் அப்பண்புகளையமைத்துச் சிறந்த பத்துப் பாடல்கள் பாடி ஞர். அவருடைய செய்யுட்கள் சொற்சுவையும், பொருட் சுவையும் அமைந்திருத்தலோடு கேட்போருடைய உள் ளத்தைக் கவருமுறையிலும் அமைந்திருந்ததனுல் மன் னன் அவருக்கு நூருயிரம் பொற்காசுகளைப் பரிசி லாக அளித்தான். அதனோடு மனம் அமைதியுருமல் ஒரு மலையின்மேல் ஏறி நின்று தன் கண்ணிற், கெட்டிய வரையில் உள்ள நாடுகள் எல்லாவற்றையும் கொடுத்தான். கபிலருடைய அறிவின் திறமையும் சொல்

லாற்றலும் அவருக்குச் சிறந்த பரிசில்களைப் பெற்றுத் தந்தன. கபிலர் சிலநாள் அங்கிருந்து விடைபெற்றுப் பாரிமகளிர் இருந்த இடத்தை யடைந்தார்.

*பாரிமகளிர் திருமணம் :*

பாரிமகளிரை அழைத்துக்கொண்டு திருக்கோவலூரை நோக்கிச் சென்று, அங்கு வாழ்ந்த மலையமான் திருமுடிக்காரியின் துணையைப் பெற்று, அவன் மரபில் பிறந்த இளமையும் அழகும் பொருந்திய இளைஞர் இருவர்க்குப் பாரிமகளிர் இருவரையும் மணம் செய்து வைத்தனர். அவ்வேளை கபிலருக்கு நண்பராய மன்னர்களும் வள்ளல்களும் பெருஞ் செல்வர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்திச் சிறப்புச் செய்தனர்.

கபிலர் பாரிமகளிரை மணம்செய்வித்த பின்னர், பாரியை நினைத்துப் பலநாள் தனித்து வருந்துவாராயினர். தம்முயிரினும் இனிய நண்பன் பாரியைப் பிரிந்து உயிர் வாழ்வதற்கு விருப்பமில்லாமையினால் பெண்ணையாற்றின் இடையில் உள்ள மணற்பரப்பில் வடக்கிருந்து உயிர்துறந்தார். அவர் இறந்த இடத்தில் அவருடைய உருவத்தைக் கல்லினாற் செய்து அமைத்து வழிபட்டு வருகின்றனர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த கபிலர் இயற்றிய செய்யுட்கள் தமிழ்மொழிக்குச் சிறந்த பெருமையளித்து விளங்குகின்றன. இவர் இயற்றிய செய்யுட்களும் நூல்களும் தமிழ் பயில்வோர் அனைவர்க்கும் மிகுந்த மகிழ்ச்சியை யளிப்பன. பத்துப்பாட்டில் ஒன்றாகிய குறிஞ்சிப் பாட்டையும், ஐங்குறு நூற்றில் மூன்றாவது நூறையும், பதிற்றுப் பத்தில் ஏழாம்பத்தையும் இன்னா நாற்பது என்னும் நூலையும், கலித்தொகையில் குறிஞ்சிக் கலிப் பாக்களையும் இவர் இயற்றிப் புகழ் பெற்றார்.

# 4. பொதுநலப் புலவர் கோவூர் கிழார்

*மூவேந்தர் தமிழ் வளர்த்த முறை :*

இயல் இசை நாடகம் என மூன்றுகப் பகுக்கப்பட்ட தமிழ், சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தராலும் பாதுகாக்கப்பட்ட சிறப்புடையதாகும். பாண்டிய மன்னர்கள் சிறப்பாக முச்சங்கங்களைத் தோற்றுவித்து அவற்றின் வாயிலாகத் தமிழை வளர்த்த காரணத்தால் செந்தமிழ் மன்னர் எனப் போற்றப்பட்டனர். அவர்கள் ஆண்ட அப்பாண்டி நாடு செந்தமிழ் நாடு எனச் சிறப்பிக்கப் பெற்றது. அகத்திய முனிவரும் அவருக்குப்பின் தோன்றிய தொல்காப்பியனுர், நக்கீரர், கபிலர், பரணர், ஔவையார் முதலிய சான்றேர் பலரும் தமிழை வளர்த்த நாடு தண்டமிழ்ப் பாண்டி நாடேயாகும். ஆயினும் சேர சோழ மன்னர்களும், தமிழ் வளர்த்தலில் பின்னடைந்தவர்களல்லர். சேரமன்னர்கள் பதிற்றுப் பத்து முதலிய நூல்களாலும், சோழ மன்னர்கள் பத்துப் பாட்டு முதலிய நூல்களாலும், வேறு தனிப் பாடல்களாலும் போற்றப் பெற்றவர்கள். சிறந்த புலவர்களை ஆதரித்துப் பரிசிலளித்துத் தமிழ் வளர்த்த சேரசோழ மன்னர்கள் கணக்கில் அடங்கார். இம்மூவேந்தருள்ளும் பலர், புலவர்களை ஆதரித்தல் மட்டுமன்றித் தாமே புலமை பெற்றுக் கவிபாடும் இயல்பையும் பெற்றிருந்தார்கள். புலவரோடு போட்டியிடும் மனப்பான்மையின்றித் தமிழ்ச் சுவை நுகர்ந்தும், தமிழ்ப் புலவர் மனங்களிக்குமாறு நூற் கருத்துக்களை எடுத்துப் பேசியும், புதிதாக வரும் புலவருடைய தரத்தை அறிந்து பரிசில் நல்கியும் அம்மன்னர்கள் புலமையிற் சிறந்து விளங்கித் தமிழை வளர்த்தனர்.

மூவேந்தர் தொன்மை :

இத்தகைய சிறப்பு வாய்ந்த மூவேந்தரும் சிறந்த பழமை யான குடியைச் சேர்ந்தவர்கள் என்று நூல்கள் கூறு கின்றன.

"வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரிதல் இன்று"

என்ற திருக்குறளில் வந்த பழங்குடி யென்பதற்குப் பொருள் கூறவந்த ஆசிரியர் சேர சோழ பாண்டியர் என் றாற் போன்ற குடிகள் எனக் கூறினர். இங்ஙனமே பழைய நூலாசிரியர்களும் மூவேந்தரையும் தமிழ் மன்னர் எனப் பாராட்டிக் கூறினர்.

சோழன் நலங்கிள்ளி :

அத்தகைய பழங்குடிகளுள் ஒன்றாகிய சோழர் குடி யில் இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் சோழன் நலங்கிள்ளி என்பவன் பெருமையும் சிறப்பும் பெற்று விளங்கினான். அவன் தந்தை இறந்த போது நலங்கிள்ளி மிக்க இளைஞனாக இருந்தான்; நல்ல அமைச் சர்களையும் புலவர்களையும் தனக்கு அறிவு புகட்டும் துணை யாகப் பெற்றிருந்ததனால் அரசியலில் மிக்க சிறப்புற்று விளங்கினான்; தன் தலைநகரமாகிய உறையூரில் முதுகண் ணன் சாத்தனார் என்னும் புலவரிடம் தமிழ் நூல்களைப் பயின்று புலமை யெய்தினான்; அவருடைய அறிவுரை களைக் கேட்டுச் செங்கோல் முறை தவறாது நாட்டை ஆட்சி செய்தான்.

சோழன் நலங்கிள்ளி தான் பிறந்த அரச குலத்திற் கேற்றபடி வீரம், புகழ், கொடை, ஆண்மை, முதலியவற் றிற் சிறந்து விளங்கியதோடு புலவர்களுக்கும் வரிசை யறிந்து பரிசில் நல்கிப் புகழ் பெற்றான்.

## புலவர் கோவூர் கிழார்

உறையூரில் சோழன் நலங்கிள்ளி புலவர் பாடும் புகழ் உடையவனுய் வாழ்ந்த காலத்தில் அந்நாட்டில் உள்ள கோவூரில், வேளாளர் குலத்தில், ஆன்ற புலமையும், அறிவும், இறைவன்பால் அன்பும் கொண்ட சிறந்த குடியில் கோவூர் கிழார் என்னும் புலவர் பிறந்தார். அவருடைய இயற்பெயர் நாளடைவில் மறைந்து அவர் பிறந்த ஊராகிய கோவூரின் தொடர்பால் "கோவூர் கிழார்" என்னும் பெயரே அமைந்தது. பண்டைக் காலப் புலவர் பலர் ஊர், குடி முதலியவற்ருல் மட்டுமே குறிக்கப்பட்டு இயற்பெயர் காணஒண்ணுதவாறு இருந்தவரும் உண்டு. சேக்கிழார் என்பது குடியின் காரணமாக வந்த பெயர். ஆலத்தூர் கிழார், முதலியனவும் காணத்தக்கன. கோவூர் கிழார் இளமைப் பருவத்திலேயே ஆசிரியர்பால் சிறந்த நூல்களை விரும்பிக் கற்றுப் பெரும் புலமை யெய்தினுர். அஞ்சாமையும், அறிவும், ஊக்கமும், கல்வியைப் போலவே அவர்பால் நாளும் வளர்ந்து வந்தன. நாட்கள் செல்லச் செல்ல, கோவூர் கிழாரின் புலமை சோழர் தலை நகரமான உறையூரிலும், சோழநாட்டின் பல இடங்களிலும் பரவலாயிற்று. கல்வியோடு உலகியல் அறிவும், பிறர் நலம் பேணும் பெருமையும் வளர்ந்து வந்ததனுல் அரசர் விரும்பி யழைத்து அவருடைய ஆலோசனையைக் கேட்கும் வாய்ப்பும் நேர்ந்தது.

## சோழன் நெடுங்கிள்ளி :

சோழ மன்னர் ஆளும் நாட்டில் அரசுகட்டில் ஏறிய மன்னரேயன்றி அம்மன்னர் குடியிற் பிறந்த தாயாதியரும் குறுநில மன்னர்களாக இருத்தல் உண்டு. சமயம் வாய்க்கும்போது படை திரட்டிப் பகைமன்னரை வென்று பேராட்சி செலுத்துவதும் உண்டு. அங்ஙனமே சோழன்

நலங்கிள்ளி ஆண்ட நாட்டில் அவன் தாயாதியான நெடுங்கிள்ளி யென்பவன் சிற்றரசு செலுத்தி வந்தான். அவன் நலங்கிள்ளி இளைஞனாய் இருத்தலைக் கருதியும், போரில் பழக்கமில்லாதவன் என்பதை எண்ணியும், தன்னுடைய படையைக்கொண்டு சோழன் நலங்கிள்ளியைப் போர் முறையால் வென்று நாட்டைக் கைப்பற்ற எண்ணினான். அவ்வேளையில் பாண்டிய நாட்டில் இருந்த மன்னனும் சேரநாட்டு மன்னனும் சோழன் நலங்கிள்ளியை வென்று அடிப்படுத்தவே கருதினர். சேர பாண்டியர் நலங்கிள்ளியோடு பகைமை பாராட்டுதலை யறிந்த நெடுங்கிள்ளி, தன் தயாதியான நலங்கிள்ளியைப் பலவாறு பழித்தும் இழித்தும் கூறினான். அவ்வுரைகளை ஒற்றர் வாயிலாக அறிந்த நலங்கிள்ளி பெருஞ்சின முற்றான். படையெடுத்துச் சென்று அப்பொழுதே பகைவனை யழிக்கவும் துணிந்தான். ஆயினும், அவ்வேளை தன் மனத்தில் தோன்றிய கோபத்தினால் சிறந்ததொரு சூளுரை புகன்றான்.

*சோழன் நலங்கிள்ளி வஞ்சினம் :*

"பகைவர் வணங்கி வந்து என் கால்களைத் தொழுது ஈ என்று இரந்து கேட்பார்களாயின், முரசு முழங்கும் சிறப்புடைய இவ்வரசாட்சியை அவர்களுக்கே உடைமையாகக் கொடுப்பேன். என் இனிய உயிரையும் கொடுப்பேன். அன்றித் தன்னை ஆற்றலுடையவனெனக் கருதி என்னுடைய ஆற்றலைப் போற்றாமல் என் ஊக்கத்தையும் முயற்சியையும் இகழ்ந்து ஒருவன் கூறுவானாயின், அவன் தூங்கும் புலியை இடறி விட்ட குருடன் போல அழிந்து போவது திண்ணம். அவன் தப்பிப் பிழைத்தல் அரிது, யானையின் காலில் அகப்பட்ட மூங்கில் முளையைப்போல அவன் வருந்துமாறு நான் போரிட்டு அழிக்காமல் இருப்பேனாயின் தீய எண்ணத்தையுடைய கூடாமகளிர்

சேர்க்கையால் எய்தும் பழியை யான் அடைவேனாக" என்று கூறினான்.

இவ்வாறு சோழன் நலங்கிள்ளி கூறிய வஞ்சினத்தாலும், வேறு பல சூழ்நிலைகளாலும், நெடுங்கிள்ளி தன் போர் முயற்சியைத் தணித்திருந்தான். ஆயினும் அவன் போர் முயற்சியைக் கைவிட்டானல்லன்.

*பாண்டியன் போர் முயற்சி :*

பாண்டிய நாட்டில் செங்கோலோச்சிய வேந்தன் சோழன் நலங்கிள்ளியின் புகழ் மேலும் மேலும் வளர்தலைக் கண்டு மனம் புழுங்கினான். தன்னிலும் இளையவனாகிய நலங்கிள்ளி புலவர்பாடும் புகழ்பெற்று மேலோங்குதலைக் கண்ட பாண்டியன் விரைந்து போரிட்டுச் சோழநாட்டைக் கைப்பற்றுவதே செய்யத்தக்க செயல் எனத் துணிந்தான். படைகளுக்குப் போதிய பயிற்சியளித்தான். சேரமன்னன் முதலியோர்க்கும் செய்தி தெரிவித்துத் தனக்குத் துணை வேண்டும்போது வந்து உதவ வேண்டுமென ஒப்புதல் செய்து கொண்டான். இங்ஙனம் பாண்டியன் போர் முயற்சியில் ஈடுபட்டிருத்தலை ஒற்றர் வாயிலாகச் சோழன் நலங்கிள்ளி அறிந்தான்; சீற்றம்கொண்டு தானும் படையெடுக்கத் துணிந்தான்; இச்செய்தியைப் பாண்டிய நாட்டின் வடஎல்லையில் பறை அறைந்து தெரிவிக்குமாறு செய்தான்; தன்னாட்டில் இருந்த மக்களில் விருப்பத்தோடு வந்து சேர்ந்தவர்களைப் படையிலே சேர்த்துக் கொண்டான். பெரிய படை திரண்டது. பிறநாடுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து வந்தாலும் புறங்காணக்கூடிய ஆற்றலும் பயிற்சியும் மிக்க படைகள் பலவேறு பகுதிகளாகப் பெருகின.

போர் கிடைக்காமையால் வருந்திக் கிடந்த மன்னனும், மறவரும் இப்போர் வருகையைக் கண்டு உள்ளம்

மகிழ்ந்து தோள்கொட்டி ஆர்த்தனர். பாண்டியனைச் சோழ நாட்டில் புகவொட்டாது பாண்டிய நாட்டிலேயே சென்று புக்கு அழிப்பது சிறப்பெனக் கருதினான் சோழன். ஆதலால் பெரும்படை திரட்டிச் சென்ற சோழன் நலங் கிள்ளி சிங்க வேறு போலச் சீறியெழுந்தான்.

மூவேந்தர் போர் :

பாண்டிய மன்னனும் படை திரட்டிக் கொண்டு எதிரே வந்தான். இருவர் படையும் பாண்டி நாட்டிலேயே எதிர்த்துக் கொண்டன. சோழருடைய படை அளவிலும் ஆற்றலிலும் பெரிதாக இருந்தும் பாண்டியன் நாட்டிற் சென்று போரிட்டதினால் சிறிது வலிகுறைந்தது போல் காணப்பட்டது. பாண்டியன் படை முன்னேறித் தாக்கியது. இதனைக் கண்ட சோழ மன்னனுடைய சினம் பெருகியது. அதனால் மன்னன்தானே படையுட்புக்குப் போரிடத் தொடங்கினான். படைகளும் தொடர்ந்தன. சோழர் பக்கம் வெற்றி சேர்வது போன்ற நிலைதோன்றியது. பாண்டி நாட்டுப் படை பலவேறு சூழ்ச்சிகள் செய்தும் சோழர் படையைத் தடுக்க முடியவில்லை. சோழர்முன்னேற்றம் மேலும் மேலும் வளர்ந்தது. பாண்டியனும் இன்னது செய்வதெனத் தெரியாது திகைத்தான்; தனக்குத் துணையாகச் சேரமன்னனை அழைக்கத் துணிந்தான்; தக்க தூதர்களை யனுப்பிச் சேரனைப் படையெடுத்து வந்து தனக்குத் துணை புரியுமாறு வேண்டினான். சேர மன்னனும் தக்க சமயம் வாய்த்தது எனக் கருதி, விரைந்து படையுடன் புறப்பட்டு வந்து சோழப்படையை வளைத்துக் கொண்டான்.

இவ்வாறு சேரன் வருவான் என்பதை முன்னரே யறிந்திருந்த சோழன் நலங்கிள்ளி, சோழ நாட்டில் இருந்து வேறு படையை அழைத்துச் சேர மன்னனை

வளைத்துக் கொண்டான். இவ்வாறு சோழர் படையினால் வளைக்கப்பட்ட சேரன் செயலற்று ஓய்ந்தான். பகையை வலிந்து அழைத்த பாண்டியன் செய்வதறியாது திகைத்தான். இனிச் சோழ மன்னனோடு சமாதானம் செய்து கொண்டாலன்றித் தனக்கு உய்வில்லை என்பதை அறிந்த பாண்டியன், சோழ மன்னனிடத்துச் சமாதானம் பேசுமாறு பெரியோர் சிலரை யனுப்பினான். ஏழெழில் என்ற இடத்தில் கோட்டையினுள் இருந்தவாறே பாண்டியனும் நலங்கிள்ளியும் தமக்குள் உண்டாகிய பகையை மறந்து ஒற்றுமை காண முனைந்தனர்.

*நலங்கிள்ளியின் வெற்றி:*

சோழ மன்னன் வெற்றி கொண்ட இடம் அவனுக்கே உரியதென்று முடிவாயிற்று. அம்மன்னன் தன் குடை உயர்ந்து விளங்குமாறு முன்னே செல்லச் சேரனும் பாண்டியனும் அவனுக்கு அடங்கின மன்னர்கள் என்பது புலப்படுமாறு குடைகளைத் தாழ்த்திப் பிடித்துப் பின்னே செல்ல, ஏழெழில் கோட்டையினுள் உலா வந்தனர். இதனைக் கண்ட கோவூர் கிழார் வியந்து பாராட்டினர். "அறம் முன்னே செல்லப் பொருளும் இன்பமும் பின் தொடருமாறு போலச் சோழன் முன்னே செல்லச் சேரனும் பாண்டியனும் பின் சென்றனர் எனத் தம் செய்யுளொன்றில் எடுத்துக் கூறினர். அவர் பாடிய செய்யுளில் சோழன் நலங்கிள்ளியினுடைய பெருஞ் சிறப்புக்களும், அவன்பிறநாட்டு மன்னர்களை அடக்கி ஆளும் திறமையும் விளக்கப்படுகின்றன. சிறப்புடைய பொருளும் இன்பமும் அறத்திற்கு அடுத்தபடியாக வைத்தெண்ணப் படுவன என்பதற்கேற்பச் சோழனாகிய உன்னுடைய குடை முன்னே உயர்ந்து செல்லச் சேர பாண்டியருடைய இரண்டு குடைகளும் பின் தொடரும் இயல்புடையன. உன்னுடைய யானைகள் பகைவருடைய மதில்களைக்

குத்திப் பாயும் ஆற்றல் உடையன. போர்ச்செய்தி கேட்டு மகிழும் நின்படை மறவர், காடிடையிட்ட நெடுந் தொலை வில் போர் கிடைப்பினும் செல்லேம் எனக் கூருது விரும் பிச் செல்லும் விழைவினையுடையவர்கள். பகைவர் நாடு களில் தங்கிப் பின்னர் கீழ் கடல் ஓரமாகச் செல்லும் நீ, மேல் கடலைச் சார்ந்த நாடுகளையும் வென்று, வடபுலத்தில் உள்ள நாடுகளையும் அடிப்படுத்த வருவாயோவென எண்ணி வடபுலத்தரசர் தூங்காதவர்களாய் இருக்கின் றனர்." என்ற கருத்தமைய இயற்றிய செய்யுள் படிக்குந் தோறும் இன்பமும் சுவையும் நல்குவதாயுள்ளது.

ஆவூர்க் கோட்டை முற்றுகை :

சேர பாண்டியரைப் புறங்கண்டு வந்த சோழன் நலங் கிள்ளி உறையூரை வந்தடைந்தான். உள்நாட்டில் சிற் றரசனாய் இருந்து வந்த நெடுங்கிள்ளி ஆவூர்க்கோட்டை யைக் கைப்பற்றிக் கொண்டான். அச்செய்தியைக் கேள்வியுற்ற நலங்கிள்ளி பெருஞ்சினம் கொண்டான்; சோழன் நெடுங்கிள்ளியின் தவருன முயற்சியைக் கண்டு மனம் வருந்தினன். போர் புரிந்து மக்களை மாளும்படி செய்வதில் விருப்பமில்லாத நலங்கிள்ளி போரை விரும் பாமல் சமாதான முறையில் நெடுங்கிள்ளியை வெளி யேற்ற வேண்டுமென எண்ணினன். அதனல் போரிடா மல் ஆவூர்க்கோட்டையைச் சுற்றி வளைத்துக் கொள்ளும் படி நலங்கிள்ளி தன் படைகளையனுப்பினன். நலங் கிள்ளியின் படைகளால் வளைக்கப்பட்ட ஆவூர்க்கோட்டை யின் உள்ளிருந்த பகைவர் கோட்டைக் கதவைத் தாளிட் டுக் கொண்டனர். நாட்கள் பல சென்றன. உள்ளிருந்த யானை முதலிய படைகளும் நாளுக்கு நாள் உணவு குறைந்தமையால் செயலற்று வருந்தின. உள்ளிருந்த மக்கள் உணவு பற்ருமையாலும், நீர் முதலியன கிடைக் கப் பெருமையாலும் மிகவும் வருந்தினர்கள். மகளிர் பூச்

சூடப்பெருமல் வெறுங்கூந்தலே முடித்தார்கள். குழந்தை களும் கூக்குரலிட்டு அழுதன. இந்த நிலையினைக் கேள்வி யுற்ற கோவூர் கிழார் மிகவும் வருந்தினுர். நெடுங்கிள்ளி யிடம் கோட்டையினுள் புகுந்து கதவைத் திறக்கும்படி கூறவேண்டும், அல்லது கதவைத் திறந்து கொண்டு வந்து போர் புரியும்படி கூறவேண்டும் எனக் கருதி, நலங் கிள்ளியினிடம் விடை பெற்றுக்கொண்டு புலவர்க்கு இருக் கும் தனியுரிமையோடு நேரே கோட்டையினுள் சென்ருர். உள்ளே அடைத்துக் கொண்டிருந்த நெடுங்கிள்ளி புல வரை வரவேற்ருன்; எனினும் புலவர் என்ன கூறுவாரோ என்று எதிர்பார்த்தான். கோவூர் கிழார் சிறந்த அறிவுரை களை எடுத்துப் பேசலானுர்.

கோவூர் கிழார் அறிவுரை :

ஆண் யானைகளும் பெண் யானைகளும் பெரிய குளத்தில் நீராடாமலும், அரிசியுணவாகிய நெய் கலந்த கவளங்களைப் பெருமலும், கட்டுத் தறியை முறித்துக் கொண்டு நிலத்திற் புரளும் கைகளையுடை யனவாய்ப் பெருமூச்சு விட்டுக்கொண்டு வருந்து கின்றன. அக்களிறுகள் இடி போல் முழங்கு கின்றன. பாலில்லாக் குழந்தைகள் அலறுகின்றன. மகளிர் மலரில் லாத வெறுங்கூந்தலை முடிக்கின்ருர்கள்; வீடுகளில் மக்கள் நீரில்லாமையால்கூக்குரலிட்டுஅழுகின்ருர்கள்.இத்தகைய துன்பமான நிகழ்ச்சிகளைக் கண்டும் கேட்டும் அவற்றை மாற்ருது, நீமட்டும் உண்டும் உடுத்தும் மகிழ்ச்சியோடி ருத்தல் எவ்வளவு தவருன செயலாகும். நெருங்குதற் கரிய வலிமையும் வெற்றியையும் உடைய தோன்றலே! நீ அறத்தின் வழியைப் பின்பற்றுவோனுயின் இக்கோட்டை உன்னுடையது எனச் சொல்லி வாயில் கதவைத் திறப்பாயாக; நீசிறந்த போர்வீரத்தை மேற்கொள் வோனுயின் போர் செய்வதற் கேற்றவாறு திறப்பாயாக;

நீ அறமும் மறமும் இன்றிக் கதவைத் திறவாது அடைத்துக் கொண்டு கோட்டையின் ஒரு புறத்தில் அடங்கிக் கிடத்தல் ஆராய்ந்து பார்ப்பின் நாணத்தகும் செயலன்றோ! என்னும் நற்கருத்துக்களைப் புகன்றார்.

இவ் வறிவுரைகளைக் கேட்ட நெடுங்கிள்ளி ஆவூர்க் கோட்டையை மேலும் அடைத்திருத்தல் தனக்கே மிகுந்த துன்பத்தைக் கொடுக்கும் என்பதையெண்ணி அவ்விடத்தினின்றும் வெளியேறித் தன்னிடத்தை அடைந்தான்.

## நெடுங்கிள்ளி உறையூர்க் கோட்டையைக் கைப்பற்றல்:

நெடுங்கிள்ளி ஆவூர்க் கோட்டையினின்று வெளியேறிச் சென்றாலும் மனத்தில் பகை தணிந்தானல்லன். தன்னைவிட இளையவனான நலங்கிள்ளி பெருமன்னனாய் முடி சூடி வாழ்தலைக்காண அவன் மனம் பொறுக்கவில்லை. என்றைக்கேனும் நலங்கிள்ளி சோர்ந்திருக்கும் நேரத்தில் அவன் ஆட்சிப் பீடத்தைக் கவர்ந்து கொள்ள வேண்டும் என எண்ணி, அதற்குப் பலவாறு சூழ்ச்சிகள் செய்து அற்றம் நோக்கியிருந்தான். நாடு காவலை மேற்கொண்ட நலங்கிள்ளி நாட்டில் உட்பகை நேராதவாறு பல்வேறு இடங்களுக்கும் அடிக்கடி சென்று பகைவரை வலியடக்கி வந்தான். அவ்வாறு வெளியில் சென்று சில வேளைகளில் மாதக்கணக்கிலும் ஆண்டுக் கணக்கிலும் தங்கி இருத்தல் உண்டு. இதனை ஒரு வாய்ப்பாகக் கருதிய சோழன் நெடுங்கிள்ளி ஒரு முறை உறையூர்க் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டான். வெளியிற் சென்றிருந்த நலங்கிள்ளி இச்செய்தி யறிந்து திரும்பி வந்து உறையூர்க் கோட்டையுள் புகாது ஆவூர் கோட்டையுள் தங்கி இருந்தான். கோவூர் கிழார் அவ்வேளை வெளி நாடுகட்குச் சென்றிருந்தமையால் அவர் திரும்பி வந்த

பின், சந்து செய்து உறையூர்க் கோட்டையைப் பெறுவதே முறை யென்றும். முற்றுகையிட்டு உறையூர்க் கோட்டையினுள் இருக்கும் மக்களையும் விலங்குகளையும் படைகளையும் வருத்துதல் பழியையும் பாவத்தையும் வளர்க்கும் என்றும் கருதிப் போரை மேற்கொள்ளாமலும் முற்றுகையிடாமலும் இருந்து வந்தான்.

புலவர் இளந்தத்தனர் :

கோவூர் கிழார் சென்றவிட மெல்லாம் சிறப்பாக வரவேற்கப் பெற்று நாட்டு மக்களுக்கு ஆங்காங்கு நல்லுரைகள் புகன்று தமிழ் மணம் பரப்பி வந்தார். இதற்கிடையில் இளந்தத்தனர் என்னும் புலவர் ஒருவர் நலங்கிள்ளியிடம் வந்து தம் புலமைத் திறத்தால் மகிழ்வித்தார்; அம்மன்னனல் சிறப்பாகப் பாராட்டப் பெற்றுப் பரிசில் அடைந்து மகிழ்ந்து சென்றர். சென்றவர் நேரே தம்மூரை யடையாது நெடுங்கிள்ளியும் சிறப்போடு வாழ்தலைக் கேள்வியுற்றுப் பரிசில் பெறுவதற்காக உறையூர்க் கோட்டைக்குள் சென்றர். நெடுங்கிள்ளியைக் கண்டு தம்முடைய புலமை விளங்குமாறு பல நல்லுரைகள் புகன்று மன்னனை வாழ்த்தினர். தாம் நலங்கிள்ளியிடம் பெரும் பொருள் பரிசில் பெற்று வந்திருத்தலையும் எடுத்துக் காட்டினர். அவ்வாறே தமக்குப் பரிசில் அளிக்க வேண்டு மென்றும் கூறினர். நெடுங்கிள்ளி அது காறும் புலவர் இளந்தத்தனரை ஓர் இயற்புலவரெனவே மதித்திருந்தான்.

புலவர் சிறைப்படல் :

சோழன் நலங்கிள்ளியிடம் இப்புலவர் பரிசில் பெற்று வந்தார் என்பதைக் கேள்வியுற்றதும் நெடுங்கிள்ளி மிக்க சினம் கொண்டான். இவர் உண்மையிற்

புலவரல்லர். தம்முடைய படைநிலை, உணவு நிலை முதலியவற்றை அறிந்து சென்று நலங்கிள்ளிக்குக் கூறவந்த ஒற்றன் எனவே கருதினான். மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேயன்றோ? உடனே இளந்தத்தனாரைப் பிடித்துச் சிறையிலிட்டுக் கொல்லுமாறு கட்டளையிட்டான். பகையைப் பெரிதெனக் கருதினவர் பழிச்செயலைச் செய்வதற்கு அஞ்சமாட்டார் ஆதலின், இவ்வாறு கட்டளையிட்டான் நெடுங்கிள்ளி.

அங்குத் தனித்து வந்த புலவர் இளந்தத்தனார் சோழனுடைய சொல்லைக் கேட்டு வியந்தார்; மனம் கலங்கினார். சொல்ல வேண்டுவன எல்லாம் சொல்லிப் பார்த்தார். "முடவன் சொல் அம்பலத்தில் ஏறுமோ? ஒற்றன் என ஐயப்பட்ட பின்னர் புலவர் சொல் மன்னன் செவியில் ஏறுமோ? செய்வகை யறியாது திகைத்த புலவர் காவலரால் பிணிக்கப்பட்டுச் சிறையிடப் பெற்றார்.

### கோவூர் கிழார் வருத்தம் :

நாட்கள் பல சென்றன. கோவூர்கிழார் சோழன் நலங்கிள்ளி இருந்த இடத்தை யடைந்தார். உறையூரை நெடுங்கிள்ளி பற்றிக் கொண்டதைக் கேள்வியுற்று வருந்தினார். அதனோடு புலவர் இளந்தத்தனார் ஒற்றன் எனத் தவருக எண்ணப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டதையும், கொலைத் தண்டனை விதிக்கப்பட்டிருத்தலையும் கேள்வியுற்று மனம் பதைத்தார்; நெஞ்சு உருகினார்; புலன் அழுக்கற்ற புலவர்க்குப் புரவலன் செய்த கொடுமையை நினைத்துக் கவன்றார்; யாரிடமும் விடை பெருது விரைந்து சென்றார்; உறையூர்க் கோட்டையினுள் புகுந்து சோழன் நெடுங்கிள்ளியின் முன் தம் சினம் புலப்படுமாறு நின்று அவன் செய்த தவறுகளை யெல்லாம் எடுத்துக் கூறிப் புலவர் இளந்தத்தனாரைச் சிறையிட்டது

மன்னிக்க முடியாத பெருந் தவறு என்பதனைக் கூறி னர். புலவர் இளந்தத்தனாரை ஒற்றன் எனவே மறுபடி யும் நெடுங்கிள்ளி வற்புறுத்திப் பேசினன். கோவூர் கிழார் மன்னரால் மதிக்கப்படும் புலவரைச் சிறையிட்ட நெடுங்கிள்ளியின் நீங்காப் பழிச் செயலை எடுத்து விளக் கிப் பேசினர். அவ்வேளை புலவர்களின் இயல்பையும் கேட்போர் உள்ளம் உருகுமாறு எடுத்துக் கூறினர்.

## புலவர் இயல்பு:

"தமிழ் நூல்களை நன்கு கற்றறிந்த புலவர்கள் பரிசில் அளிக்கும் வள்ளல்களைத்தேடிப் பழுத்த மரத்தை நாடிச் செல்லும் பறவைகளைப்போலச் செல்வார்கள். மிக நீண்ட தூரம் என்று கருதாது கடத்தற்கரிய பாலை நிலங்கள் பல வற்றைக்கடந்தும் செல்வார்கள், தம்முடைய நாவினால் தம் மால் இயன்ற அளவு பாடி அவ்வள்ளல்கள் பால் பெற்ற பொருளைக் கொண்டு மகிழ்வார்கள்; சுற்றத்தாரை உண் பித்துத் தாமும் உண்பார்கள். தமக்குப் பிற் காலத்திற்கு வேண்டுமென்று சேமித்து வையாது மனம் சுருங்காமல் எல்லோர்க்கும் அள்ளிக் கொடுப்பார்கள்; தம்முடைய பெருமைக்கு ஏற்பத் தம்மை மதிக்கும் மன்னர்களின் வரி சைப் பொருளுக்கு மகிழ்ந்து வாழும் பரிசில் வாழ்க்கை உடையவர்கள்; அவர்கள் பிறருக்கு எந்த நாளிலும் எக் காரணத்தாலும் தீங்கு நினையாத பெருமையுடையவர் கள்; தம்முடைய பகைவரும் நாணும்படி இறுமாந்து செல்லும் இயல்புடையவர்கள்; புகழ் மேம்பட்ட மன்னர் களைப் போன்ற மேன்மையும் உடையவர்கள். அத் தகைய புலவர்களுள் ஒருவராகிய இளந்தத்தனர் உனக் குத் தீங்கு செய்வாரோ? அன்றி உன்னைப் போன்ற மன்னர்இடும் குற்றேவல்களைச் செய்யும் சிறுமையுடைய வரோ அவர்?" என்று எடுத்துக் கூறினர்.

*புலவர் விடுதலை :*

கோவூர் கிழார் கூறிய நல்லுரைகளைக் கேட்ட நெடுங் கிள்ளி தன் குற்றத்தை உணர்ந்து, இளந்தத்தன் என்னும் புலவரை உடனே விடுவித்து, அளிக்க வேண்டிய பரிசில்களை அளித்துக் கோவூர்கிழாரிடம் ஒப்படைத்தான். கோவூர் கிழாரும் புலவர் இளந்தத்தனுரை அழைத்துக் கொண்டு உறையூர்க் கோட்டையினின்றும் வெளியேறினர்.

*சோழமன்னன் போர் முயற்சி :*

பின்னர், நலங்கிள்ளி தன் பகைவனுகிய நெடுங் கிள்ளியை அழிக்கவும் அவன் பற்றியிருந்த உறையூர்க் கோட்டையைக் கைப்பற்றவும் துணிந்தான்; அமைச்சர் முதலானவர்களோடு சூழ்ந்து படைத்தலைவர்களுக்கும் கட்டளையிட்டான். போர் தொடுத்தாலன்றி நெடுங்கிள்ளி ஒழுங்குமுறைக்குக் கட்டுப்பட்டுவாரான் என்பதையுணர்ந்த நலங்கிள்ளி வேறு வகையின்றிப் போரை மேற்கொண்டான். அப்பொழுது படைகள் உறையூர்க் கோட்டையை முற்றுகையிட்டன. போரினல் மடியும் மக்களின் துன்பத்தை உணர்ந்த கோவூர் கிழார் விரைந்து வந்து அரசர் இருவர்க்கும் சந்து செய்யத் துணிந்தார். போர்புரிந்து தம் ஆற்றலை வெளிப்படுப்பதே தம் கடமையெனு அரசர் கொள்வாரன்றி மக்கள் படும் துன்பத்திற்கு இரக்கங் கொள்வரோ? அதனுல் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இருக்கும் பகையைத் தீர்த்து வைத்தல் வேண்டும் என எண்ணிய கோவூர் கிழார் அவ்விருவர்க்கும் புத்தி புகட்டும் முறையில் சில நல்லுரைகளைப் புகல்வாராயினர்.

*போரை நிறுத்துதல் :*

“சோழன் நலங்கிள்ளியே! உன்னேடு போர் செய்யும் பகை மன்னன். பனம்பூ மாலையைத் தரித்த சேரன்

அல்லன். வண்டு மொய்க்கும் வேப்பமாலையைத் தரித்த பாண்டியனுமல்லன். உன்னுடைய தலையில் அணிந்த மாலை ஆத்திப்பூ மாலையாகும். உன்னோடு போர் செய்யும் மன்னனுடைய மாலையும் ஆத்தி மாலையே யாகும். உங்களில் ஒருவர் தோற்றாலும் தோற்பது சோழர் குடியே யாகும். நீங்கள் இருவீரும் வெற்றி பெறுதல் என்பதும் இயலாது. ஆதலினால் நீங்கள் இவ்வாறு போரிட்டுக் கொள்ளுதல் நுங்கள் குடியின் பெருமைக்குச் சிறந்த தாகாது. கொடி கட்டிய தேரையுடைய உங்களைப் போன்ற சேரபாண்டிய மன்னர்களுக்கு நுங்கள் செய்கை உடம்பு பூரிக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கும் எனக் கூறினார்; இக்கருத்தினை அமைத்து ஓர் செய்யுள் இயற்றினார்; அவரியற்றிய செய்யுள் என்றும் நின்று சோழர் குடிக்குப் பெருமையை நல்குவதாக உள்ளது. கோவூர்கிழார் கூறிய நல்லுரைகளைக் கேட்ட சோழமன்னர் இருவரும் போரை நிறுத்தினர்.

*மலையமான் சிறப்பு :*

சோழன் நலங்கிள்ளி காலவயத்தால் விண்ணுலகு சென்றான். பின்னர் சோழ நாட்டினை ஆளும் உரிமை கிள்ளிவளவன் என்பானுக்கு வந்தது. கிள்ளி வளவன் நலங்கிள்ளியால் பண்பட்ட சோழநாட்டை ஆளும் உரிமை பெற்றிருந்ததனால் செங்கோல் ஆட்சி முறை சிறப்பாக நடத்த வாய்ப்பு உண்டாயிற்று. அக்காலத்துத் திருக்கோவலூரைச் சார்ந்த பகுதி மலையமான் நாடு எனக் கூறப்பெற்றது. அந்த நாட்டை ஆண்ட மலையமான் சிறந்த வள்ளலாக விளங்கினான். சிறுநிலப் பகுதியை யாண்ட குறுநில மன்னனேயாயினும் அவன் மூவேந்தரும் எய்தாத பெரும் புகழைப் பெற்றிருந்தான். மலையமான் திருமுடிக்காரி என்ற பெயரும் இவனையே குறிக்கும். அவன் ஏறிச் செலுத்தும் குதிரைக்குக் காரி என்பது பெயர். ம்மன்னன் சிறந்த படைகளைச் சேர்த்துவைத்துக்

கொண்டு அவற்றிற்கு நல்ல பயிற்சி அளித்து வைத்திருந்தான். மூவேந்தருக்குள் பகை நேர்ந்த காலத்தில் தமக்குப் படைத்துணைவருமாறு மலையமானுக்கு எவரேனும் ஒரு மன்னர் வேண்டுகோள் விடுப்பர். அவ்வேண்டுகோட்கிணங்கி அம்மன்னரோடு சேர்ந்து போரிட்டால் வெற்றி மலையமான் பக்கமே என்பதற்கையமில்லை. மலையமான் படைத்துணை வந்துள்ளான் என்பதைக் கேள்வியுற்றவுடன் பகை மன்னர் அஞ்சிச் சந்து செய்து கொள்வர். பகைவர் நாட்டில் கவர்ந்த பொருள்களில் பெரும் பகுதி மலையமானுக்கே சொந்தமாவது வழக்கம். தான் கொண்டு வந்த பொருள்களைப் புலவர் கூட்டத்திற்கும் எளிய மக்களுக்கும் ஈந்து பெரும் புகழைப் பெற்று வந்தான். புலவர் பாடும் புகழ் அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியையளித்தது, புலவரால் பாடப்படும் பேற்றைச் சிறந்த பேறு என்று அவன் கருதினன். ஆதலால் அள்ளி வழங்கி வள்ளல் என்ற பெயரைப் பெற்றான்.

தமக்கு வேண்டும் என்று சேமித்து வைக்காமல் வாரி வழங்குகின்றவர்களுக்கே வள்ளல் என்ற பெயர் வாய்க்கும். அத்தகைய புகழ் வாய்ந்த மலையமானுக்கும் கிள்ளி வளவனுக்கும் சிறிது பகை இருந்து வந்தது. பெருநில மன்னனாகிய கிள்ளி வளவன் குறுநில மன்னனாகிய மலையமானுக்குக் கிடைத்த புகழையும் வெற்றியையும் கண்டு மனங்கவன்றான். எனினும் மலையமானை நேர் முறையில் பகை பாராட்டி வெற்றி கொள்ளக் கிள்ளிவளவனுக்கு இயலவில்லை.

### சிறுவரைச் சிறைப் பிடித்தல்:

மலையமானுடைய மக்களாகிய இளஞ் சிறுவர் இருவர் வேட்டை காணும் விருப்பத்தோடு வீரரைத் துணைக் கொண்டு காட்டினுள் புகுந்தனர். வேட்டை

யின் மேற்கொண்ட எண்ணத்தால் படைவீரரைப் பிரிந்து காட்டினுள் பல இடங்களிலும் சுற்றித் திரிந்தனர். அவ் வேளை கிள்ளி வளவனுடைய பணியாட்கள் வீரர் சிலரை அழைத்துக் கொண்டு சென்று சிறுவர் இருவரையும் பிடித்து வந்து சோழன் அரண்மனையில் சிறைப் படுத்தினர். சோழ மன்னன் மலையமானிடத்துத் தான் கொண்டிருந்த பகைக்குப் பலியாக இளஞ்சிறுவர் இரு வரையும் யானைக்காலில் இடுவித்துக் கொல்ல முடிவு செய் தான். சிறுவர் இருவரும் சில நாள் சிறையிலே பாதுகாக் கப்பட்டனர். இச்செய்தி நாடு முழுவதும் பரந்தது. கேட்ட மக்கள் அனைவரும் வருந்திக் கண்ணீர் சிந்தினர்; மன்னனிடத்தில் நேரிலே சென்று சிறுவரைக் கொல்லு தல் தவறு எனத் துணிந்து கூருது மயங்கி இருந்தனர். சினங் கொண்ட மன்னன் பின்னர் சினந்தணிவான் என நம்பி வாளா இருந்தனர். சோழனுல் தன் மக்கள் சிறைப் பிடிக்கப்பட்ட செய்தி தெரியாது மலையமான் பலவிடங்களி லும் தேடி வந்தான். ஆதலால் மலையமானுக்குத் தெரி வதற்கு முன்னரே சிறுவரைக் கொன்றுவிட வேண்டு மென்று கிள்ளி வளவன் நினைத்தான்; சிறுவரைக் கொலைக்களத்தில் கொண்டு வந்து நிறுத்துமாறு வீரர் களுக்குக் கட்டளை யிட்டான். சிறுவரைக் கொல்லுதற்கு இரண்டு யானைகள் கொண்டு வரப்பட்டன. அக்காட்சி யைக் காண மக்கள் கூட்டம் பெருகி நின்றது. சிறுவர் இருவரும் தாம்புதிய இடத்திற்கு வந்திருப்பதை அறிந்து அச்சத்தால் அழுதனர்.

*புலவர் சிறுவரைக் காத்தல் :*

அவ்வேளையில் உறையூருக்கு வந்த கோவூர் கிழார் இச்செய்தியைக் கேள்வியுற்ருர். அரண்மனையை நோக்கி விரைந்து ஓடினுர்; மன்னனைக் கண்டு சினந்து பேசினுர்; மன்னன் கோவூர் கிழாருடைய முன்னிலையில் வணங்கி

நின்ருன். கோவூர் கிழார் பின்வரும் அறிவுரைகளைப் புகன்ருர். "புகழ் மிக்க சோழர் குடியில் பிறந்த நீ! சிறுவரைக் கொல்லத் துணிந்த இச்செயலானது கேட்போர்க்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக்குவதாகும். உன்னுடைய குடிக்கு அழியாத பழி தருவதாகும். உன் குடியிற் பிறந்த முன்னேர் பெற்றிருந்த புகழெல்லாம் இன்ருேடு அழிந்து போய்விடும். நீ கொல்லக் கருதிய சிறுவர் இருவரும் சிறந்த வள்ளலும் புலவர் தோழனும் ஆகிய மலையமானுடைய மக்களாவர். இச்சிறுவரை நீ கொல்வது புலவர் கூட்டத்தையே அழிப்பது போன்றதாகும். இக்குழந்தைகள் கள்ளம் அற்ற உள்ளமுடையவர்கள். தம்மைக் கொல்ல வந்த யானையைக் கண்டு அவர்கள் தம் அழுகையை மறந்து இருக்கின்ருர்கள்; புதிய மக்கள் கூட்டத்தைக் கண்டு அஞ்சுகின்ருர்கள். இத்தகைய இளங் குழந்தைகளைக் கொல்வதற்கோ நீ மனம் துணிந்தாய்? ஒரு புருவிற்காகத் தன்னுடம்பையே கொடுத்த சிபியின் மரபிற் பிறந்தவனல்லனே நீ? பசுவின் கன்றுக்காகத் தன் மகனையே பறி கொடுத்த மனுநீதிச் சோழனுடைய வழித் தோன்றல் அல்லனே நீ? யான் கூறிய இம்மொழிகளைக் கேட்டு நீ விரும்பியவாறு செய்க" என்பதாகும்.

கோவூர் கிழார் கூறிய மொழிகளைக் கேட்ட கிள்ளி வளவன் தான் செய்ய இருந்த தவருன செயலையும் அதனுல் தனக்கும் தன் குடிக்கும் நேர இருந்த பெரும் பழியையும் நினைத்து நீண்ட நேரம் வாளாவிருந்தான். பின்னர் உண்மை யுணர்ந்து விரைந்து சிறுவர் இருவரையும் விடுதலை செய்யுமாறு கட்டளையிட்டான். தன்னுடைய குடியின் பெருமையைப் பாதுகாத்த கோவூர் கிழாருக்கு நன்றி செலுத்தினன். புலவரும் கிள்ளி வளவனுடைய பண்பினை மதித்து வாழ்த்துக் கூறிச் சிறுவர் இருவரையும் தம்முடன் அழைத்துக் கொண்டு சென்ருர்.

புலவர் புகழ் :

]வ்வாறு கோவூர் கிழார் சிறந்த புலவராக இருந்த தோடு மன்னர் தவறு செய்யும் பொழுதெல்லாம் அஞ் சாது சென்று எடுத்துக் கூறி நல்லறிவு பெறுமாறு செய் தார். எளிய மக்களுக்குத் துன்பம் நேர்ந்தபொழுதெல் லாம் அவற்றை நீக்கிப் பாதுகாத்தார். சிறந்த கொடை வள்ளல்களைப் பாராட்டி அவர் புகழ்விளங்குமாறு உயர்ந்த கவிகளையும் நூல்களையும் இயற்றினர். அவர் கிள்ளி வள வன் மீது இயற்றிய பாணாற்றுப்படை அவருடைய புல மையை எடுத்து விளக்கும் சிறந்த நூலாகத் திகழ்கின் றது. புலவர் உலகத்திற் சிறந்த ஒளி வீசிநின்ற கோவூர் கிழாரின் தன்னலமற்ற சேவை தமிழ் நாட்டிற்கே சிறந்த புகழைத் தந்துள்ளது. அவர் புகழ் என்றும் நிலைத்து நிற்கின்றது. கோவூர் கிழார் தோன்றியதனல் தமிழ் நாடு தலை நிமிர்ந்து நிற்கும் பேறுபெற்றது.

# 5. அருந்தமிழ் வளர்த்த ஔவையார்

*பண்டைக் காலப் பெண்பாற் புலவர்கள் :*

தமிழ் நாட்டில் பண்டைக் காலத்தில் கல்வியின் மேம்பட்ட புலவர்கள் ஆண்பாலரேயன்றிப் பெண் பாலரும் இருந்தனர். கல்வி ஆண் பாலார், பெண் பாலார் என்னும் இருவர்க்கும் பொதுவுடைமையே யன்றி ஆண் பாலர்க்கு மட்டும் உரித்து என்னும் கொள்கை அக்காலத்திருந்ததில்லை. அக்காலத்தில் கல்வியறிவில் மேம்பட்ட ஆண்பாற் புலவரேயன்றிப் பெண்பாற் புலவரும் பலர் இருந்தனர் என்பதற்குப் பண்டைத் தமிழ் நூல்கள் சான்று பகர்கின்றன. சங்கத் தமிழ் நூல்களில் சிறந்த கருத்தமைந்த செய்யுட்களை இயற்றிய புலவர்களில் காக்கை பாடினியார், நச்செள்ளையார், காமக்கணிப்பசலையார், பாரிமகளிர், பொன்முடியார், வெண்ணிக்குயத்தியார், பேய்மகள் இளவெயினி, ஆதிமந்தியார் முதலியோர் இயற்றமிழ்ப் புலமைசான்ற பெண்பாற் புலவராவர்.

இசைத் தமிழில் வல்ல பெண்பாற் புலவர் பலர் இருந்தனர் என்பதும் நூல்களால் தெரிகின்றது. அத்தகைய பெண்பாற் புலவர்களுள் ஒருவராக விளங்கியவர் ஔவையார் என்னும் பெருமூதாட்டியார். ஔவையார் எந்த நாட்டில், எக்குடியில் பிறந்தவர் என்பதற்குப் போதிய பழைய சான்றுகள் கிடைத்தில. தமிழ் நாட்டின் பல பாகங்கள் பல்வேறு காலங்களில் கடல் கோள்பட்டதனாலும், பகை மன்னர் பலர் போரிட்டு நாட்டாட்சியை இடையிடையே மேற்கொண்டதனாலும், தமிழ்ச் சுவடிகள் பல செல்லுக்கும், நெருப்புக்கும் இரையானதாலும் பண்டைக் காலத் தமிழ்நூல்கள் பல அழிந்தொழிந்தன. தமிழ்ப் புலவர்களைப் பற்றிய வரலாறுகள் எழுதப்பட்ட

ஏடுகளும் அழிந்துபட்டன. ஆதலால் சங்க காலத்தமிழ்ப் புலவருடைய வரலாறுகள் செவிவாயிலாகக் கேட்டறியப் பட்டு வந்தன. அவை நாளும் நாளடைவில் சிதைந்தும் குறைந்தும், மாறியும், வழங்கப்பட்டன. ஆதலால் பழந் தமிழ்ப் புலவர் பலருடைய வரலாறுகளை இக்காலத்து நாம் காண்டல் அரிதாயிற்று. அருந்தமிழ் மூதாட்டியாகிய ஔவையாருடைய பிறப்பிடம், தாய் தந்தையர் பெயர் முதலியன நாம் அறிதற்கியலாது போயின். எனினும் ஔவையார் இயற்றிய செய்யுட்களில் இருந்தும், அவ ரால் பாடப்பட்ட மன்னர்களின் வரலாறுகளில் இருந்தும் முக்கியமான சில நிகழ்ச்சிகளையும் உண்மைகளையும் நாம் அறிகின்றோம்.

*பாணர் குடி :*

பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டில் பல்வேறு குடி மக்கள் வாழ்ந்தனர். தொழில் காரணத்தால் பிரிவுபட்ட சாதியினர் பலரும் இருந்தனர். அந்தணர், அரசர், வணி கர், வேளாளர் என்ற நால்வகை இனத்தவர் வாழ்ந்த தாகத் தொல்காப்பியம் கூறுகின்றது. ஐவகை நிலத்தி லும் உயர்ந்தோர் தாழ்ந்தோர் எனக் கூறப்பட்ட குறவர், வேடர், மறவர், ஆயர், அளவர், நுளையர், முதலிய சாதி யினரும் இருந்தனர். "பாணன், பறையன், துடியன், கடம்பன் என்று இந்நான்கல்லது குடியுமில்லை" என்று சான்றோர் கூறியவாறு மேற்கூறப்பட்ட பாணன், பறை யன் முதலிய குடிகளும் இருந்தன எனத் தெரிகின்றது. மேற்கூறப்பட்ட நான்கு குடிகளுள் ஔவையார் பாணர் குடியிற் பிறந்தவர். பாணர் என்பார் இசைப் புலமை பெற்று யாழ் முதலியன கொண்டு இசைப் பாடல்கள் பாடி அரசர் வள்ளல் முதலியோரிடத்துப் பரிசில் பெற்று வாழும் ஒருவகையினர். அவருள் ஆண்பாலார் பாணர் எனவும், பெண்பாலார் பாடினியர் எனவும் கூறப்பட்டனர்.

அங்ஙனமே நாடகப் புலமை பெற்ற ஆண்பாலார் கூத்தர் எனவும், பெண்பாலார் கூத்தியர், விறலியர் என்றும் அழைக்கப்பட்டனர். இயற்புலமை பெற்ற புலவர் இரு பாலரும் புலவரெனவே கூறப்பட்டனர். ஔவையார் இயற்புலமையும், இசைப்புலமையும், நாடகப் புலமையும் பெற்றவர் எனக் கருதற்கு இடமுண்டு. அவர் இயற்றிய செய்யுட்களே இயற்புலவர் என்பதை வலியுறுத்து கின்றன.

ஔவையார் தம்மைப் பாடினி எனவும் விறலி என வும் பாடிக் கொண்டாலும் உண்மையில் அவர் பாணர் வகையைச் சேர்ந்தவரல்லர் என ஆராய்ச்சியாளர் கருது கின்றனர். கவிகள் தம்மைப் பாணராகவும், பாடினியராக வும் புனைந்து கொண்டு பாடுதலும் உண்டு. அதனுலே அவர்களைப் பாணர் பாடினியர் எனக் கூறுதல் பொருந் தாது. பத்துப் பாட்டினுள் பொருநராற்றுப்படை, சிறு பாணுற்றுப்படை, முதலிய ஆற்றுப்படை நூல்களை இயற் றிய ஆசிரியர் தம்மைப் பாணர், பொருநர் எனக் கூறிக் கொண்டது புனைந்துரை வழக்காகுமே யன்றி உண்மை வழக்காகாது. ஆதலால் ஔவையார் பாணர் மரபில் பிறந்தவர் என்பதை உறுதிப்படுத்துவதற்கு ஆதாரம் காண இயலாது.

இளமைப் பருவம் :

ஔவையார் இளமைப் பருவத்தில் சிறந்த அழகும் அறிவும் வாய்ந்தவராக இருந்ததோடு நூல்களை இடை யருது கற்றுப் புலமையும் பெற்றனர். இளமையிலேயே கவிபாடும் ஆற்றலும் அவர்க்கு இயல்பாக அமைந்தது. ஆதலால் ஒருவனை மணந்து ஓரகத்து இருக்கும் வாழ்க் கையை விரும்பாது புலமையைத் துணையாகக் கொண்டு வாழ விரும்பினர். இளமைப் பருவத்திலேயே மன்னர்

களிடத்துச் சென்று கவிகளை இயற்றிப் பரிசில் பெறும் வாழ்க்கையை மேற்கொண்டார். அதியமான் நெடுமானஞ்சி, பாரிவள்ளல், நாஞ்சிற் பொருநன், முதலிய மன்னர்களைப் பாடி அவர்களால் அளிக்கப் பெற்ற பரிசில் பலவும் பெற்று மகிழ்ந்தார். இவர் ஒரு நாட்டில் தங்காது பல நாடுகளையும் சென்று காணும் ஆவல் உடையவராய் இருந்தார். அவ்வாறு சென்று கண்டு அவற்றின் சிறப்புக்களைத் தொகுத்து ஒரு செய்யுளில் கூறியுள்ளார். மூவேந்தருடைய நாடும், தொண்டை நாடும், எவற்றால் சிறப்புற்றன என்பதைச் சுருக்கமாகக் கூறியுள்ளார். சேரனுடைய மலைநாடு யானைகளையுடையது. சோழநாடு நெல்வளம் மிக்குச் சோற்றால் விளங்கும் சிறப்புடையது; பாண்டியனுடைய தென்னாடு முத்துடையது. தொண்டை நன்னாடு சான்றோர்களையுடையது. என அவற்றின் சிறப்புக்களைக் கூறியுள்ளார்.

> வேழ முடைத்து மலைநாடு மேதக்க
> சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
> தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயல்
> தொண்டை
> நன்னாடு சான்றோர் உடைத்து"

என்பதே ஔவையார் பாடிய செய்யுளாகும்.

ஔவையாரும் சங்க நூல்களும் :

ஔவையார் சங்க காலத்து வாழ்ந்து வந்த புலவர். சங்க காலம் என்பது கி. மு. மூன்றும் நூற்றாண்டு முதல் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுவரை உள்ள காலம் எனக் கருதுகின்றனர். அக்காலத்து எழுந்த நூல்கள் சங்க நூல்கள் எனப்பட்டன. அவை கடைச் சங்கத்தில் அரங்கேற்றப்பட்டுச் சங்க நூல்களாக ஒப்புக் கொள்ளப்பட்டன. எட்டுத்தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்

கணக்கு என்னும் மூவகையைச் சேர்ந்த முப்பத்தாறு நூல்களும் சங்க நூல்கள் எனப்படும். அவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, என்னும் எட்டு நூல்களும் எட்டுத் தொகை எனப்படும். திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்னும் பத்தும் பத்துப்பாட்டு எனப்படும். நாலடியார், நான்மணிக்கடிகை, கார்நாற்பது, களவழிநாற்பது, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணை எழுபது, ஐந்திணை ஐம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, கைந்நிலை, என்னும் பதினெட்டும் பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் எனப்படும், ஔவையாரால் பாடப்பட்ட செய்யுட்கள் புறநானூற்றிலும், அகநானூற்றிலும். நற்றிணையிலும், குறுந்தொகையிலும் பல உள்ளன.

ஔவையார் இருவர்

சங்க காலத்திருந்த ஔவையாரே யன்றிக் கம்பர் காலமாகிய பிற்காலத்திலும் ஓர் ஔவையார் இருந்தனர் என நாம் அறிகின்றோம். ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, முதலியவற்றை பிற்காலத்திருந்த ஔவையார் பாடியிருத்தல் வேண்டும், அல்லது கம்பர் காலத்துக்குப் பிற்பட்ட காலத்தில் இருந்த ஒருவர் ஆத்திசூடி முதலிய நூல்களை இயற்றி ஔவையார் பெயரால் வெளியிட்டு இருத்தலும் கூடும். அன்றிப் பிற்காலத்தார் இயற்றிய செய்யுட்கள் சில ஔவையாருடைய நூல்களில் கலந்திருத்தலும் கூடும் எனக் கருதுகின்றனர்.

ஆதலால் ஔவையாரைப் பற்றிய பிற்காலக் கதைகளைச் சங்க காலத்திருந்த ஔவையாருடைய வரலாற்றுக்குத் துணையாகக் கொள்வது இயலாது. கம்பர் ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்தவர் எனவும் பன்னிரண்டாம் நூற்றாண்டில் இருந்தவர் எனவும் இருவேறு கருத்துக்கள் ஆராய்ச்சியாளரிடையே நிலவுகின்றன. ஔவையாருடைய காலம் சங்க காலமாகிய கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது. ஆதலால் சங்க கால ஔவையாரையும், கம்பர் காலத்து ஔவையாரையும் ஒருவர்எனக் கொள்ளுவது சிறந்த கருத்தாகாது. நெல்லிக்கனி பெற்ற ஔவையார் நீண்ட காலம் வாழ்ந்தார் எனக் கொள்ளுவர் சிலர். அஃது உண்மையானாலும் கம்பர் காலத்து ஔவையார் பாடிய செய்யுட்களின் நடையும், கருத்தும், சங்க காலத்துச் செய்யுட்களோடு முரண்படுகின்றன. ஆதலால் சங்க காலத்து ஔவை வேறு; கம்பர் காலத்து ஔவை வேறு எனக் கொள்வதே சாலப் பொருத்தமுடையதாகும்.

## *பாடப் பெற்றவர்:*

இனிச் சங்க காலத்து ஔவையாரால் பாடப் பெற்ற வள்ளல்களைப் பற்றிக் காண்போம். ஔவையாரால் பெரிதும் பாராட்டிப் பாடப் பெற்றவன் அதியமான் நெடுமான் அஞ்சியே யாவன். அவன் மகன் பொகுட்டெழினியும், நாஞ்சில் நாட்டு வள்ளலாகிய நாஞ்சில் வள்ளுவனும், அதியமானோடு பகைத்து நின்ற தொண்டைமான் என்பவனும் ஔவையாரால் பாடப்பட்டவர் ஆவர். சேரமான் மாரிவெண்கோ, பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்னும் மூவேந்தரும் சிறப்போடு ஒற்றுமையுற்று ஔவையார் காலத்து வாழ்ந்த முடி வேந்தராவர். மேற்கூறப்பட்

வள்ளல்களைப் புகழ்ந்து பாடுங்காலத்து இல்லாதவற்றை மிகைப்படுத்திக் கூறுது அவரவருடைய இயல்புகளை உள்ளது உள்ளவாறே பாடியுள்ளார். அரசர்களிடத்தும், வள்ளல்களிடத்தும் தவறு காணப்படுமாயின் அஞ்சாது எடுத்துக் கூறி அவர்களைத் திருத்துகின்ற இயல்பினராய் ஔவையார் இருந்தார்; அம்மன்னர்களிடத்துப் பாராட்டத் தக்க சீரிய குணங்கள் காணப்படுமாயின் அவற்றைப் புகழ்ந்து மேலும் அவர்க்கு ஊக்கம் உண்டாக்குவர்; வள்ளல்களிடத்தில் தாம் பெறுகின்ற பரிசில் ஒன்றையே பெரிதாகக் கருதாது அவரால் நன்கு மதிக்கப்படுதல் ஒன்றையே சிறப்பாக விரும்பினர்; தாம் செல்வமுடையவராய் இருந்த காலத்தும் ஏழையாகிய விறலியெனத் தம்முடைய அடக்கம் தோன்றுமாறு எடுத்துக் கூறும் பண்புடையவராய் இருந்தார். ஔவையாரிடத்தில் மற்றப் புலவர்களிடத்துக் காணப்படாத தனிப்பண்புகளும் சில இருந்தன. அவற்றுள் புகழ்வது போல இகழ்வதும், இகழ்வது போலப் புகழ்தலும், பெருஞ் செல்வத்தை மதித்து அதனுல் பிறருக்குப் பணியாமையும் சிறந்து அவர்பால் விளங்கின. அவர் உலகியல் பண்புகள் பலவற்றைத் தம்முடைய செய்யுட்களில் இடையிடையே கலந்து எழுதும் தன்மையுடையவர். அவர் அதியமானுடைய அரண்மனையில் அவன் வேண்டுகோளுக்கிணங்கி நீண்ட காலம் இருந்து கல்வி, அரசியல், முதலியவற்றினைப் போதித்துச் சிறந்த பெருமையோடு வாழ்ந்தார்.

ஔவையாரும அதியமானும :

அதியமான் என்னும் வள்ளல், அதியமான் நெடுமானஞ்சி எனவும், எழினி எனவும், நூல்களில் கூறப்படுகின்ருன். அவன் சேலம் மாவட்டத்தில் இப்போது தருமபுரி என வழங்கப்படுகின்ற தகடூர் என்னும் ஊரைத் தலை

நகரமாகக் கொண்டு ஆண்டவன். அதியர் என்ற ஒரு வகை மரபினர் சேர மன்னர்களுக்கு உறவுமுறை உடையவர்கள். அந்த அதியர் மரபில் இவன் பிறந்தமையால் அதியமான் எனப்பட்டான். இவனுடைய முன்னோர் விண்ணுலகத்தில் இருந்து கரும்பைத் தமிழ் நாட்டிற்குக் கொண்டு வந்த பெருமையுடையவர்கள். இச்செய்தி புறநானூற்றில் (392)வது செய்யுளில் ஔவையார் பொகுட்டெழினியைப் பாடிய பொழுது

"அரும் பெறல் அமிழ்தம் அன்ன
கரும்பு இவண் தந்தோன் பெரும்பிறங்கடையே"

என்று கூறியுள்ளார். இவரே புறம் 99-இல்

"அமரர்ப்பேணியும் ஆவுதி அருத்தியும்
அரும்பெறல் மரபிற் கரும்பிவண் டந்தும்"

என அதியமான் நெடுமானஞ்சியைக் கூறிய செய்யுட் பகுதியாலும் அறியலாம். இவன் சேரமன்னர்க்கு உறவினன் என்பதை விளக்க, சிறந்த ஒரு சான்றும் உண்டு. இவன் பனம்பூ மாலையைத் தரித்துக் கொள்ளும் வழக்கமுடையவன். இவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன்; போரில் விருப்பமுடைய ஒருவகைக் கூட்டத்தாரை வீரர்களாகப் பெற்ற படையுடையவன்; சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், முதலிய ஏழுமன்னர்களை வென்றவன். அவர்களுடைய கொடியில் காணப்படும் ஏழு இலாஞ்சனைகளையும் பெற்றவன். பகைவர்க்குப் புறங்கொடாது வெற்றி காண்பதிலே விருப்பமுடையவன் ; போதும் என்ற மன அமைதி கொள்ளாது மேலும் மேலும் படையெடுத்துச் சென்று பகைவரை அழித்த லிலே விருப்பம் உடையவன். இத்தகைய பேராற்றலும்,

கொடைத் திறனும் உடைய அதியமானைக் காணவேண்டும் என்னும் விருப்பத்தால் ஔவையார் தகடூரை நோக்கிச் சென்று அவனுடைய அரண்மனையை அடைந்தார்.

*கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு:*

ஔவையார் அதியமானை முன்னர்க் கண்டு பழக்கமில்லாதவராயினும் அவன் வள்ளல் தன்மையில் சிறந்தவன் எனக் கேள்வியுற்றமையால் அவனைக் காணச் சென்றார். சென்ற ஔவையாருக்குச் சிறந்த முறையில் வரவேற்புக் கிடைத்தது. அங்குச் சிலநாள் மகிழ்ச்சியோடு ஔவையார் தங்கி வாழ்ந்தார். அவர்க்குப் பரிசில் அளித்தால் விரைவில் வேறுநாடு சென்று விடுவார் என்பதை நினைத்த அதியமான் பரிசில் அளியாது காலம் தாழ்த்தி வந்தான். தமக்குப் பரிசில் அளித்துச் செய்ய வேண்டிய சிறப்புக்களைச் செய்யாது அதியமான் காலம் தாழ்த்திய செயல் ஔவையாருக்கு அவன்மீது மிகுந்த வெறுப்பை உண்டாக்கிற்று. அதனால் சினமுற்ற ஔவையார் வாயில் காவலனிடத்துத் தம்முடைய உள்ளக் கருத்தை வெளியிட்டுச் சொல்லிவிட்டு வேறுநாடு செல்ல விரும்பினார். அதனால் "வாயிலைக்காவல் புரிவோய், வள்ளல்களுடைய செவி என்னும் நிலத்தில் கருத்துடைய சொற்களாகிய விதைகளை விதைத்துத் தாம் விரும்பிய பரிசிலாகிய விளை பொருள்களை அடைகின்ற பரிசிலர் வருகின்ற போதெல்லாம் தடையின்றிச் செல்வதற்காக அடையாத வாயிலைக் காப்போய்! விரைந்து செல்லும் குதிரையை யுடைய நெடுமானஞ்சியானவன் தன்னுடைய பெருமையின் அளவை அறியமாட்டான் போலும். எம்போன்ற புலவருடைய திறத்தையும் அறியான் போலும். இந்த வுலகத்தில் எம்போன்ற புலவர்களை வரவேற்கும் அறிவுடையோர் பிறர் ஒருவரும் இல்லையோ? யாங்கள் இப்பொழுதே எங்களுடைய

இசைக் கருவிகளை யெல்லாம் எடுத்துக் கட்டிக் கொண்டு செல்லுகின்றோம். எந்தத் திசை நோக்கிச் சென்றாலும் அவ்விடத்தில் எமக்கு உதவி செய்வார் பலர்உளர்" என்று கூறிவிட்டு வெளியேறத் தொடங்கினர். வாயிற் காவலனால் செய்தியறிந்தான் அதியமான்; விரைந்து ஓடிவந்தான்; ஔவையாரை அழைத்துச் சென்று தாம் பரிசில் அளியாது காலம் நீட்டித்ததற்குரிய காரணத்தை எடுத்துக் கூறினன். பின்னர் அவர் மனம் மகிழுமாறு பெரும் பொருட் பரிசிலையளித்தான். அவருடைய சுற்றத்தாரும் உண்டுகளிக்குமாறு எண்ணருஞ் செல்வமெல்லாம் ஈந்து மகிழ்வித்தான்.

### அதியன் அளிக்கும் பரிசிற் சிறப்பு :

அதியமான் அளித்த பரிசிலையும் செய்த சிறப்புக் களையும் கண்ட ஔவையார்க்கு வியப்புப் பெரிதாயிற்று. அதனால் பரிசில் அளிக்கும் சிறப்பினைப் புகழ்ந்து பின்வருமாறு கூறுவாராயினர். "அதியமானிடத்துப் பரிசில் பெறச் செல்வோர் ஒருநாள் அன்றிப் பலநாள் சென்றாலும், ஒருவரேயன்றிப் பலரோடு சென்றாலும் முதல் நாளில் செய்த சிறப்புப் போலவே சிறிதும் மாறாது இன்முகங்காட்டிப் பரிசில் அளிக்கும் சிறப்புடையவன். அதியமானிடத்திலிருந்து பரிசில் பெறுவதற்குக் காலம் நீட்டிக்கும் ஆனாலும், அல்லது உடனே கிடைப்பதாயினும் பரிசில் கிடைப்பது மட்டும் உறுதி. யானை தன் கையால் எடுத்த உணவு அதன் வாயினுள் புகுவது உறுதி. அதுபோல அதியமானுடைய அரண்மனையை அடைந்தவர்க்கும் பரிசில் கிடைப்பது ஐயமில்லாத உறுதியுடையதாகும் என்று அதியன் அளிக்கும் பரிசிற் சிறப்பினைப் புகழ்ந்தார்.

### நெல்லிக்கனியும் நீண்டநாள் வாழ்வும் :

மக்கள் வாழ்வு நூற்றாண்டு அளவையுடையது. ஒரு நூற்றாண்டுக்கு மேலும் வாழ விரும்புவோர் அதற்கேற்றவாறு தம்முடைய உணவு, செயல், சூழ்நிலை முதலிய

வற்றை ஆக்கிக்கொண்டு பண்பட்ட உள்ளத்தை மேலும் மேலும் வளர்த்தல் வேண்டும். அவற்றுள் இன்றியமை யாதது உணவேயாகும். உணவு தூய்மை யுடையதாக வும் உடலுக்கு மேலும் மேலும் உறுதி நல்க வல்லதாயும் இருத்தல் வேண்டும். அவற்றை அளவோடும் உண்ணு தல் வேண்டும். பண்டைக் காலத்து மக்கள் உடலுக்கு ஊறுதராத சத்துள்ள உணவுகளைக் காலம் அறிந்து அளவு அறிந்து உண்டு வந்தனர். அதனுலே அவர்கள் பல்லாண்டு பல்லாண்டாக நோயின்றி வாழும் பேறு பெற் றனர். நம்முடைய ஐம்பொறிகளும் உடலுறுப்புக்களும் நீண்டநாள் கெடாது வளமுற்று விளங்க வேண்டுமானல் அதற்கேற்ற இயற்கை உணவுகளை உண்டு பழகுதல் வேண்டும். பழக்கமே மனிதனை உய்விக்கும். தீயபழக் கமே அவனை அழிக்கும். தகுதியற்ற உணவுகளால் மிகுந்த தீங்கு உண்டு என்று விஞ்ஞான நூல்கள் கூறு கின்றன; மருத்துவர் உரைக்கின்றனர்; அறிவின் முதிர்ந்த பெரியோரும் கூறுகின்றனர். ஆயினும் என்? பழக்கத்தின் வயப்பட்ட மக்களால் அவற்றை நீக்குதல் இயலுகின்றதோ, இல்லை; இல்லை. காரணம் பழக்கமே யாகும். கொடிது கொடிது பழக்கம் கொடிது என்று கூறி னும் குற்றமாகாது போலும். நம் நாட்டில் கிடைக்கும் இயற்கைப் பொருள்களாகிய காய், கனி, கிழங்கு, கீரை, இவற்றில் நல்ல சத்து உண்டு. மோர் பால் வெண்ணெய் முதலியவை மிக்க வளமுடைய பொருள்கள். இவற்றின் தன்மை யெல்லாம் கண்டு துய்க்கப் பழக வேண்டும். மருந்துச் செடிகள் போன்ற கீரைகள் பல உண்டு. அவற் றில் பொன்சத்தும், இரும்புச் சத்தும் உண்டு. அவற்றை உண்டவர் நீண்ட காலம் வாழ்வர். சிறந்த பழங்கள் சில உள்ளன என்றும் அவற்றை உண்டவர் நீண்ட நாள் களைப் பின்றி வாழ்வர் என்றும் நூல்கள் கூறக் காண்கின்ருேம்.

கோப்பெருஞ் சோழனுக்கு உயிர் நண்பராய் இருந்த பிசிராந்தையார் பலவாண்டுகள் உயிர் வாழ்ந்தும் நரையின்றி, இருந்தார். அதற்குக் காரணம் அவர்க்கு அமைந்த இயற்கைச் சூழ்நிலை, எனினும் அவர் துய்த்த உணவும் ஒரு சிறந்த காரணமாய் இருந்திருத்தல் வேண்டும்.

நெல்லிக்கனி, கனிகளுக்குள் சிறந்த சத்துள்ள கனியாகும். அதனை யுண்டவர் தம் உடலில் உள்ள இரத்தம் தூய்மைப்படும். நரைத்த தலையுடையவர்க்கு மேலும் நரைக்காதவாறு செய்ய நெல்லிக்காயின் சாறு ஒரு சிறந்த மருந்தாகும். அத்தகைய நெல்லிக் கனியில் பலவேறு வகையுண்டு. அவற்றை ஆய்ந்து ஏற்பனவற்றை மட்டுமே எடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

### ஔவையாரும் நெல்லிக்கனியும் :

அதியமான் நெடுமானஞ்சி ஒரு மலையின் பிளப்புக்கிடையில், பருத்துயர்ந்து வளர்ந்திருந்த நெல்லிமரத்தில் கிடைக்கக்கூடிய ஒரு கருநெல்லிக்கனியின் சிறப்பினைக் கேள்வியுற்றான். அம்மரம் பலவாண்டுகளுக்கொரு முறை ஒரே கனியை ஈனக்கூடியது. அது யாவர்க்கும் எளிதில் கிடைக்க ஒண்ணாதது. அக்கனியின் பெருமையை அறிந்தவர்கள் ஒரு சிலரே யாவர். அதனையுண்டவர் அமிழ்தம் உண்டவர் போன்று நீண்ட நாள் வாழும் சிறப்பெய்துவர். அது தவத்தால் முதிர்ந்த முனிவர் முதலாயினோர்க்கே கிடைப்பது வழக்கம். அக்கனியின் பெருமையைக் கேள்வியுற்ற அதியமான் அதனை அடைய வேண்டுமென எண்ணினான். செயலுக்கேற்ற பணியாளர் சிலரைத் துணையாக அழைத்துக் கொண்டு மலையின் மீது ஏறினான். நெல்லிமரம் தோன்றி வளர்ந்திருந்த இடத்தைச்சுற்றிலும் முட்புதர்களும் பாம்புப் புற்றுக்களும் வளர்ந்திருந்தன.

அவற்றைக் கடந்து மரத்தின்மீது ஏறவேண்டும். மலைப் பிளப்பில, இறங்குதலும் பின்னர் ஏறுதலும் எளியசெயல் அன்று, எனினும் அச்செயலுக்குத் துணிந்தார் சிலரை அனுப்பி அக்கனியினைக் கொணருமாறு செய்தான். கையிற் கிடைத்த கருநெல்லிக்கனியின் நிறமும் மணமும் அவன் உள்ளத்தைக் கவர்ந்தன. அப்பொழுதே சுவைத்துப் பார்க்க வேண்டுமென அவன் ஆசை கொண்டான். எனினும் அரசன் அவ்வாறு அதனை வெளியிடத்தில் வைத்து உண்ண விரும்பாது அரண்மனைக்குக் கொண்டு சென்றான். கிடைத்தற்கரிய நெல்லிக்கனி கிடைத்ததை எண்ணிக் களிப்பென்னும் கடலில் மூழ்கினான். அதனைச் சுவைத்தது போலவும் அதனால் தன் உடல் உரம்பெற்று, ஒளிபெற்று விளங்குவது போலவும் மனத்தில் எண்ணினான். இவ்வாறு எண்ணிக் களித்திருக்கும் நேரத்தில் அருந்தமிழ் மூதாட்டியாகிய ஔவையார் அங்கு வந்தார். ஔவையாரைக் கண்ட மன்னன், அகமும் முகமும் மலர அன்போடு வரவேற்றான். மன்னனுடைய மகிழ்ச்சியைக் கண்ட ஔவையார் காரணம் யாதெனக் கேட்கும் குறிப்போடு நின்றார். ஔவையாரின் உள்ளக் கருத்தை உணர்ந்தான் அதியமான்; கருநெல்லிக்கனியின் பெருமையை எவ்வாறு சொல்வது என எண்ணினான். அமிழ்தமே கிடைப்பதாயினும் தாம் மட்டும் தனித்து உண்ணுதல் அறிவுடையோர் செயல் அன்று என்பதை அறிவான்.

“ விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று ”

எனத் திருவள்ளுவர் கூறிய பொன்னுரை அவன் உள்ளத்தைத் தட்டி எழுப்பியது. கருநெல்லிக் கனியின் பெருமையைக் கூறி, பின்னர்க் கொடுப்பின் ஔவையார் அதனைத் தமக்கு வேண்டாவென மறுத்தலும் கூடும். கனி

ஒன்றே உள்ளது என்பதை உணர்ந்தாலும் ஔவையார் அதனைப் பெற்றுக் கொள்ளமாட்டார். என்பதைக் கருதி, யாதொன்றும் கூருது அக்கனியினை ஔவையாருக்கு எடுத்து நல்கினுன். அதனைப் பெற்ற ஔவையார் எப்பொழுதும் கிடைக்கும் எளிய கனியெனவே அதனை எண்ணிச் சுவைப்பாராயினுர். அஃது என்றும் எண்ணுவதற்கும் இயலாத அளவுமிக்க சுவையும், மணமும், உடையதாய் இருந்தது. ஔவையாருக்கு ஒரு புதிய உணர்ச்சியும், மகிழ்வும் அவரை யறியாமலே உண்டாயின. ஔவையார் அக்கனியின் பெருமையை ஒருவாறு உணர்ந்து அதியமானின் முகத்தை உற்று நோக்கினுர். இனியும் அதன் பெருமையை மறைத்து வைத்தல் கூடாது என வெண்ணிய அதியமான் அதன் பெருமைகளை யெல்லாம் எடுத்துக் கூறினுன். கேட்ட ஔவையார்க்கு வியப்பும், மகிழ்ச்சியும் பெருகின. அதனுல் அவனிடத்து நன்றி உடையவராய்ப் பின்வருமாறு மகிழ்ந்து கூறுவாராயினர்.

"போர் வெற்றியினையுடைய அதியமான் நெடுமானஞ்சியே! பழமையான பெரிய மலையின் கண் ஏறுதற்கரிய உச்சியில் உள்ள மலைப்பிளப்பில் வளர்ந்திருந்த ஒரு நெல்லி மரத்தின் கனியை, அதன் பெருமையினை எனக்குக் கூருது, யான் நீண்டநாள் வாழும்படி அளித்தாய். ஆதலால் பிறைத் திங்களை முடியிலணிந்தவனும், நீலமணி போன்ற மிடற்றினை யுடையவனும் ஆகிய உமையொரு பாகனைப் போல நீ நிலைத்து வாழ்வாயாக. என்பதே ஔவையார் கூறிய வாழ்த்துச் செய்யுளின் கருத்தாகும்.

இவ்வாறு அதியமானுல் ஆதரிக்கப் பெற்று அவனுடைய அரண்மனையில் ஔவையார் பல்லாண்டுகள்

வாழ்ந்து வந்தார். அக்காலத்தில் அவர் அதியமானுக்கு உலகியல், நாட்டுமக்களின் நன்மை, அரசியல், போர்முறை முதலியன பற்றிச் சில அறிவுரைகளும் இடையிடையே கூறி, வருவாராயினர். அவன்பால் இயற்கையில் அமைந்திருந்த கொடைத் தன்மையையும், கருணையையும், செங்கோல் முறையினையும், குடிகளைப் பாதுகாக்கும் திறத்தினையும், போர் முயற்சியினையும், காட்சிக் கெளியனுந் தன்மையையும் புகழ்ந்து பல செய்யுட்களை இயற்றினர்; அவனோடு போர் புரிய வந்த பகைவர்களால் நாடும் மக்களும், அழிதலையும், போர் வீரர்கள், புண்பட்டு வருந்துதலையும, கண்ணுற்றுப்பகை வேந்தர்க்கு நல்லறிவு கொளுத்தும் முறையிலும் சில செய்யுட்களை இயற்றினர்; அதியமானுடைய ஆற்றலை அறியாமையினல் பகைவர் சிலர் படையெடுத்து வருகின்றனர் என நினைத்து அப்பகை வேந்தர்க்குப் புலப்படுமாறு அதியமானுடைய போர்த் திறமையைப் புகழ்ந்து சில செய்யுட்களை இயற்றினர்; இங்ஙனம் நற்கருத்தமைந்த பல செய்யுட்களை யியற்றி அதியமானுக்கு உறுதுணையாய் நீண்ட நாள் வாழ்ந்து வந்தனர்.

## தொண்டைமான் படைதிரட்டுதல் :

அதியமான் வாழ்ந்த காலத்தில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டின் ஒரு பகுதியைத் தொண்டைமான் என்னும் அரசன் ஆண்டு வந்தான். அதியமான் நெடுமானஞ்சி போர்ச் செயலை இடைவிடாது மேற்கொண்டு பல நாடுகளையும் வெல்லும் எண்ணமுடையவனுய் இருக்கின்றுன் என்பதைக் கேள்வியுற்றுத் தன்னுடைய படையைப் பெருக்குவானுயினன். போர்க்கருவிகளை அளவில்லாது செய்து குவித்தான். அவனுடைய படைக்கலக் கொட்டிலில் அவற்றை உரிய முறையில்

அடுக்கி வைத்து நெய் பூசி, மயிர்ப்பீலியும், மலர்மாலையும், அணிவித்து அழகுபடுத்தினன். அவனுடைய படைக் கலக்கொட்டில் ஒரு காட்சிச்சாலையாக விளங்கியது. போர் வீரர்களையும் மிகுதியாகச் சேர்த்துத் தன் படையைத் தொண்டைமான் வலுப்படுத்தினன். விரைவில் அதியமானெடு போர்தொடுத்து அவனை அழிக்க வேண்டும் என எண்ணி இருந்தான். இவற்றை ஒற்றர் வாயிலாக அதியமான் அறிந்தான். போரை விரும்பி ஏற்றுக் கொள்ளும் பண்பு அதியமான் பால் இருப்பினும், காரணம் இல்லாது தொண்டைமானைப் பகைத்துக்கொள்ள அவன் விரும்பவில்லை. மேலும் போர்க்களத்தில் வீரர்களும் யானை.குதிரை முதலியவையும் அழிந்து பாழ் படுதலையும் அவன் விரும்பாதவனகித் தொண்டைமான்பால் நட்புக் கொள்ளவே அவன் எண்ணினன்; சிறந்த தூதர் ஒருவரையனுப்பித் தொண்டைமானுடைய உள்ளத்தை மாற்ற வ்வண( )மெனக் கருதினன்.

தூத )யல்பு :

அவ்வாறு தூது செல்லுவோர் தம் அரசனிடத்து அன்பும் கல்வியறிவும், ஆராய்ந்த சொல்வன்மையும் உடையவராய் இருத்தல் வேண்டுமெனத் திருவள்ளுவர் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

> " அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்
> பார்க்(கு)
> இன்றி யமையாத மூன்று" (திருக்குறள்)

மேலும் குடிமக்களிடத்து அன்பும் சிறந்த குடிப் பிறப்பும், அரசரால் விரும்பப்படும் பண்பும், தூதுரைப் பார்க்கு இருத்தல் வேண்டும் எனவும் கூறியுள்ளார். தன்னுயிர்க்கு

இறுதி வருவதாய் இருப்பினும் பகை வேந்தரிடத்து அஞ்சாது தாம் உரைக்கக் கருதியதனை எடுத்துரைக்கும் ஆற்றலும், கலவி வல்லார் எல்லோரையும் வெல்லத் தக்க கல்வியறிவும் எடுத்த கருமத்தைக் காலமும் இடமும் தன் கடமையும் அறிந்து முடிக்க வல்ல ஆற்றலும் தூது செல்வோன் பால் இருத்தல் வேண்டுமெனவும் அவர் கூறுகின்றார். அவற்றுள் எல்லாம் மிகச் சிறப்புடையது அஞ்சாமையே யாகும் என்பதனை வலியுறுத்தத் துணிந்த வள்ளுவர் தூது என்னும் அதிகாரத்தின் முடிவில்

"இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்(கு)
உறுதி பயப்பதாந் தூது"—எனக் கூறினார்.

தூது செல்வோர்க்குரியனவாக மேற்கூறிய இலக்கணங்கள் யாவும் அமையப் பெற்றவராய் ஔவையார் இருத்தலைக் கண்டு அவரைத் தொண்டைமானிடத்துத் தூது செல்லும்படி அதியமான் வேண்டிக் கொண்டான். அவன் கொண்ட எண்ணம் சிறந்ததாய் இருந்தாலும் அவனுக்கு வரும் நன்மைகளில் கண்ணும் கருத்தும் முடையவராய்த் தாம் இருந்ததினாலும் தூது செல்லுதற்குரிய அஞ்சாமை மட்டு மன்றி எண்ணிய எண்ணியாங்கு எய்தும் ஆற்றலும் தம்மிடத்து அமைந்திருந்ததினாலும், பகை வேந்தரையும் பிணிக்கும் சொல்வன்மை தம்மிடத்து இருந்ததினாலும், ஔவையார் தூது செல்ல இணங்கினார்.

ஔவையார் தூது செல்லல்:

ஔவையார் தகடூரினின்றும் புறப்பட்டுத் தொண்டைமான் இருந்த காஞ்சி நகரத்தை யடைந்தார். உலகம் புகழும் பெருமை வாய்ந்த ஔவையார் தம்முடைய அரண்மனையை அடைந்தமைக்குப் பெருமகிழ்வு கொண்டவனாய்த் தொண்டைமான் அவரைப் பலவாறு உபசரித்

தான். வந்த களைப்புத் தீருமாறு தொண்டை மானுடைய அரண்மனையில் ஓய்வு எடுத்துக் கொண்ட ஔவையார் மறுநாள் தொண்டைமானுடைய படைவலி முதலியன பற்றி உசாவினர். அதியமானிடத்தில் இருந்து ஔவையார் வந்திருக்கின்றார் என்பதனை அறிந்ததனல் தொண்டைமான் தன் அரண்மனை, படைக்கலக் கொட்டில், முதலியவற்றைக் காண்பித்தான். தன்னுடைய செல்வத்தையும், படைகளையும் காண்பித்தால் ஔவையார் தன்னைப் பெரிதும் மதித்து, அதியமானை காட்டிலும்" சிறந்தவன் எனத் தன்னைப் பாராட்டக் கூடும் என எண்ணினன். ஆயுதச் சாலையில் இருந்த படைக் கலங்களை யெல்லாம் கண்டார் ஔவையார். படைக் கலங்கள் எல்லாம் ஒவ்வொன்றும் தனித் தனியே மலர்மாலை சூட்டப்பட்டும், நெய் பூசப்பட்டும், மயிற்பீலியணியப்பட்டும், திரண்ட காம்புகளெல்லாம் நன்கு திருத்தப் பெற்றும் அணி அணியாக அழகு பெற்று விளங்கின. அப்படைக் கருவிகள் ஒரு முறையாவது போர்க்களத்திற்குச் சென்று வந்ததாகத் தெரியவில்லை இவற்றைக் கண்ட ஔவையாருடைய உள்ளம் அதிய மானுடைய படைக் கலங்களைப் பற்றியும், சிந்திக்கத் தொடங்கியது தொண்டைமானை நோக்கி ஔவையார் பின்வருமாறு கூறலானர். மன்ன! உன்னுடைய அரண் மனையில் பாதுகாப்பான இடத்தில் இருக்கும் இப்போர்க் கருவிகள் எல்லாம் பீலியணிந்தும் மாலை சூட்டியும் வன் மையான திரண்ட காம்புகள் திருத்தி அழகுபடச் செய்யப் பெற்றும், நெய்பூசப் பெற்றும் மிக அழகு பெற அடுக்கப் பட்டுள்ளன. எங்கள் தலைவனகிய அதியமானுடைய கூரிய நுனியையுடைய வேல்கள் எல்லாம் பகைவர்களைக் குத்தியதனல் நுனி முரியப்பெற்றுக் கொல்லனுடைய உலைக்களமாகிய சிறிய இடத்தில் பாதுகாப்பாரின்றிக் கிடக்கின்றன.

இவ்வாறு தொண்டைமானைப் புகழ்வது போலப் பழித்தும், அதியமானைப் பழிப்பது போலப் புகழ்ந்தும் கூறினர். தொண்டைமானுடைய படைகள் அழகு பெற்றிருப்பினும் பயன்படுத்தப்படாதன என்றும், அதியமானுடைய படைகள் போர்க்களத்தில் பயன்படுத்தப்பட்டன வென்றும் கூறியதனுல் தொண்டைமானையும் வெல்லத் தக்க பயிற்சியுடையவன் அதியமான் என்பதைக் குறிப்பால் விளக்கினுர். அதனைக் கேட்ட தொண்டைமானுக்கு மேலும் ஓர் ஐயம் உண்டாயிற்று. தமிழ் மூதாட்டியாகிய ஒளவையாரே, நும் நாட்டில் என்னோடு போரிடும் ஆற்றல் வாய்ந்த வீரரும் உளரோ? வீரர் எனத் தொண்டைமான் வினவினன். ஒளவையாருக்குத் தொண்டைமான் வினவிய வினு நகையை உண்டாக்கிற்று. படம் எடுத்து வருகின்ற பாம்பினைக்கோல் கொண்டு அடித்தாலும் தன்னுயிர் உள்ளவரையிலும் எதிர்த்துத் தாக்குமேயன்றி அப்பாம்பு அஞ்சிப் புறங்கொடுத்தோடுமோ? அதுபோல அதியமானுடைய நாட்டில் இருக்கும் வீரர்கள் பகைவருடைய படைக்கு அஞ்சிப் புறங்கொடுக்கமாட்டார்கள். தம் உயிர் உள்ளவரையிலும் போரிட்டு வெற்றி காணவே விழைவார்கள். அதுமட்டு மன்றி எங்கள் அதியமானும் போரை வரவேற்கும் விருப்பமுடையவன். தன்னுடைய அரண்மனை வாயிலில் கட்டித் தொங்க விடப்பட்ட முழவின் மீது காற்று அடித்தலினுல் உண்டாகும் ஓசையைக் கேட்பினும் அதனைப் போருக்கு உரிய பறை என்று நினைத்து மகிழ்வான். அவ்வாறிருப்ப நீ கேட்ட வினு கேட்போருக்குப் பெருவியப்பை யன்றோ உண்டாக்கும் எனக் கூறினுர்.

*தொண்டைமான் மனம் மாறுதல் :*

தொண்டைமான் தான் கொண்டிருந்த எண்ணத்தைச் சிறிது சிறிதாக மாற்றிக் கொண்டான். அதியமா

னைக் காட்டிலும் தான் படைவலியில் மிக்கவன் என்ற எண்ணமும் விரைவில் படையெடுத்துச் சென்றால் அதிய மானை வென்று அவன் நாட்டைக் கைப்பற்றிக் கொள்ள லாம் என்ற எண்ணமும் அவனை விட்டு ஒழிந்தன. ஔவையாருடைய அறிவு சான்ற நல்லுரைகள் பெரிய போர் ஒன்றினை நிகழாதவாறு தடுத்தது. செருக்குக் கொண்ட மன்னரால் வரும் போர் நாட்டு மக்களுக்கு எத் துணை இன்னலைத் தருகின்றது என்பதனைத் தொண்டை மான் எண்ணினான். அதியமானைப் பற்றித்தான் சிறுமை யாக எண்ணியிருந்த எண்ணத்தை அறவே விட்டான். பின்னர் ஔவையாருக்குச் சிறப்புப் பல செய்து அதிய மானுடைய தகடூருக்குச் செல்லுமாறு அனுப்பினான். ஔவையார் சொல்வன்மை யுடையவர் முறைப்படுத்தி இனிமையாகச் சொல்வாரானால் இந்த உலகத்தில் உள்ள மக்கள் யாவரும் அவன் இடும்பணியை விரைந்து செய்து முடிப்பாரன்றோ ?

> "விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது.
> சொல்லுதல் வல்லார்ப் பெறின் "
>
> —திருக்குறள்.

**மலையமான் திருமுடிக்காரியும் அதியமானும் :**

மலையமான் திருமுடிக்காரி என்பவன் திருக்கோவ லூரை ஆண்ட சிற்றரசன் என்பதும், அவன் மூவேந்தர் முதலிய மன்னர்களுக்குப் படைத்துணை சென்று பகை வரை அழிப்பவன் என்பதும் அப்போரினாற் பெற்ற பொருளை அள்ளிக் கொடுத்து வள்ளல் எனப் போற்றப் பட்டவன் என்பதும் நூல்களால் நாம் அறிகின்றோம். மலையமான் சிற்றரசனாய் இருந்தும் பெருவேந்தர்க்கும் கிடைக்காத வெற்றியையும், புகழையும் அடைதலைக் கண்டு சிலர் அவன் மீது வெறுப்புக் கொண்டனர்.

அதியமான் நெடுமான் அஞ்சி மலையமான் மீது நீண்ட நாளாகக் கொண்டிருந்த பகை காரணத்தாலும் அவன் தன்னை மதிக்காது செருக்குக் கொண்டிருந்ததனுலும் அவன் ஆற்றலை அடக்கக் கருதி அதியமான் பெரும்படை யோடும் சென்ருன்.

இச்செய்தியை அறிந்த திருமுடிக்காரி, தானும் படை யெடுத்து வந்து அதியமானுடன். போர் தொடங்கினன் போர் கடுமையாக நடைபெற்றது. வாளொடுவாளும், வேலொடு வேலும், கரியொடு கரியும், பரியொடு பரியும் மோதலாயின, போர் முழக்கம் எட்டுத் திசைகளிலும் சென்று பரந்தது. அதியமான் தன் ஆற்றல் முழுவதும் புலப்படுமாறு அன்று பெரும்போர் நிகழ்த்தினன். போர் நிகழ்ச்சிகளை நேரில் காண விரும்பிய ஔவையார் அதிய மானுக்கும் மலையமானுக்கும் நடந்த போரை நேரிற் கண் டார். பகைவனகிய மலையமான் தன்னுற்றல் உணராது வந்து அதியமானேடு பொருது நிற்கின்ருன் என எண் ணினர். மலையமானுடைய நிலை கண்டு இரக்கங் கொண் டார். பகை வேந்தர்க்கு அதியமானுடைய திறமையை எடுத்துச் சொன்னல் பின்னர் உண்மை உணர்ந்து அவர் பணிந்து நடக்கக் கூடும் என நினைத்தார். அதனுல் பகை நீங்கிப் போரின்றி நாடு வளம் பெறும் எனவும் நினைத்து அதியமானுடைய சிறப்புக்களைப் பகை வேந்தர் முன்னிலையில் எடுத்துப் பேசினர்.

### அதியமான் சிறப்பு:

அதியமானுடைய வாள் பகைவரை யழித்தலால் கூர்மை மழுங்கிப் போயுள்ளன. அவனுடைய வேல்கள் பகைவர் நாட்டை அழிக்கப் பயன்பட்டதால் காம்பு ஒடிந்து கிடக்கின்றன. பகைவருடைய அரண்களைத் தாக்குதலால்

அதனுடைய தந்தங்களில் கட்டியபூண்கள் கழன்று போய் விட்டன. அவனுடைய குதிரைகள் போர்க்களத்தில் உலாவி வருதலாலும், பகை வீரருடைய மார்பை மிதித்த லாலும் இரத்தக்கறை படிந்து காணப்படுகின்றன. அதிய மான் கடல் போல் பரந்த சேனையையுடையவன். பொன் ஞல் செய்யப்பட்ட தும்பை மலர்மாலையைத் தலையிற்சூடிய வன். பகைவருடைய அம்புகள் தைத்தலால் துளைக்கப் பட்ட கேடயத்தையுடையவன். இச்சிறப்புக்களையுடைய அதியமானுல் கோபிக்கப்பட்டவர் தப்பிப் பிழைத்தலும் கூடுமோ? நெற்கதிர் விளைந்துள்ள பழமையான உங்கள் ஊர், உங்களுக்கே சொந்தமாக வேண்டுமானுல் அவனுக் குச் செலுத்த வேண்டிய திறையைச் செலுத்தி வணங்கு வீர்களாக, அவ்வாறு கொடாதிருப்பீரானுல் அவன் மனம் பொறுத்திருக்க மாட்டான். அவன் வெற்றி கொள்ளும் போர் முயற்சியை யுடையவன் என யான் சொல்லுகின்ற இச்சொல்லைக் கேட்டுத் தெளியாமல் இருப்பீர்களானுல் உங்களுடைய அழகிய கூந்தலையும், சிறிய வளையல்களையு முடைய உரிமை மகளிரை விட்டு நீங்கள் பிரிவது திண் ணம். இந்தஉண்மைகளை யறிந்து போர் செய்வீர்களாக என்று கூறினுர்.

மேலும் அவன் வலிமையை விளக்க விரும்பிய ஒளவையார் பின்வருமாறு கூறலானுர். பகை வேந்தர் களே நீங்கள் அதியமானேடு பகைத்துப் போர்க்களத்தில் புகுதலை மேற்கொள்ளாதீர்கள். எங்கள் நாட்டு மன்ன ஞகிய அதியமான் சிறந்த வன்மையுடையவன்; ஒரு நாளில் எட்டுத் தேர்களைச் செய்து முடிக்கும் தச்சன் ஒரு வன் ஒரு மாத முழுவதிலும் பாடுபட்டுச் செய்த தேர்க் காலைப் போன்றவன். ஆதலால் அவனை எளியன் என்று கருதிப் பகைத்துக் கொள்வீர்களானுல் துன்பம் உங் களையே சேரும் என்பதாம்.

பகை வேந்தர்களே! எங்கள் தலைவனாகிய அதிய மானைக் காண்பதற்குமுன் உங்கள் வலிமிக்க படைகளால் அவனை வெல்வோம் என்று சொல்லுதல் பொருந்தும், அவனைக் கண்டபின் அவ்வாறு உங்களால் கூறுதற்கிய லாது. ஆதலால் கூழைப்படையும், தார்ப்படையும் கொண்டு அவனை வெல்வோம் என்ற சொல்லை இப்பொ ழுதே நீக்கி விடுங்கள் என்றும் ஔவையார் கூறினார். (ஒரு சேனையின் முற்பகுதியில் செல்லும் படைக்குத் தார்ப்படை என்பதும், ஈற்றில் செல்லும் படைக்குக் கூழைப்படை என்பதும் பெயர்.)

இவ்வாறு ஔவையார் கூறியும் கேளாமல் மலையமான் எதிர்த்து நின்று போரிட்டான். முடிவில் மலையமான் போரிட ஆற்றாது புறமுதுகிட்டான். மலையமானுடைய கோவலூரை அதியமான் கைப்பற்றிக்கொண்டான். அவனுடைய கோவலூர் வெற்றியைச்சிறப்பித்துப் பரணர் என்னும் செந்நாப்புலவரும் பாடியதாக ஔவையார் புகழ்ந் துள்ளார்.

*அருந்தவப் புதல்வனை அதியன் காணுதல்:-*

கோவலூரில் மலையமானுடன் பொருதுவெற்றி கண்ட அதியமான் மீண்டும் தகடூருக்கு வந்து சேர்ந் தான். தனக்குத் தவமைந்தன் பிறந்த செய்தி கேள்வி யுற்றான். அருமருந் தன்ன மைந்தனைக் காண்டல் தந் தைக்குக் கடன், எனச்சான்றோர் கூறினர். அவ்வறி வுரையை மறுக்காமல் போர்க்கோலத்தில் நின்ற அதிய மான் அக்கோலத்தைக் களையாமலே சென்று தன்னருந் தவப்புதல்வனைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்தான். அப் பொழுதும் அவனுடைய சிவந்த கண்கள் நிறம் மாறாமலே இருந்தன. அதனைக்கண்ட ஔவையார் அவனுடைய

கோலத்தையும் அவன் உள்ளத்தின் நிலையையும் படம் பிடித்துக்காட்டுவதுபோல எடுத்துக் கூறியுள்ளார்.

"அதியமானுடைய கையின்கண் உள்ளதுவேல்; காலின் கண்உள்ளன வீரக்கழல்கள்; உடம்பில் உள்ளது வேர்ப்பு; கழுத்தின்கண் உள்ளது பகைவர் அம்பு பாய்ந்ததால் உண்டாகிய ஈரம் காயாத புண். தலையிலே பூமாலையும், வெட்சி மலரும், வேங்கைப்பூவும் கலந்த மாலையும் காணப்படுகின்றன. புலியை மோதிய யானையைப்போல இன்னும் சினம் மாருது இவன் இருக்கின்ருன். ஐயோ! இவனுக்குச் சினத்தையுண்டாக்கியவர் தப்பிப் பிழைப்பார்களோ. பகைவரை வெகுண்டு பார்த்த கண்கள் தன்னுடைய புதல்வனைப் பார்த்த பின்னரும் சிவப்பு நிறம் மாருமல் இருக்கின்றன. என்பதே அவர் கூறியதாகும்.

தகடூர் முற்றுகை:

மலையமான் திருமுடிக்காரி அதியமானுல் வெல்லப் பட்டமையால் தன் கோவலூரை யிழந்தான். தனக்குச் சிறந்த துணைவனுகிய சேர நாட்டு மன்னன், சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையினிடம் சென்று தன் குறையை எடுத்துக் கூறினுன். மலையமான் திருமுடிக் காரிக்குச் சேர மன்னனுடைய துணை ஒன்றே போதுமானது. ஆதலால் சேரமன்னன் இணங்கிப் போருக்குப் புறப்பட்டான். வழியில் இருந்த "வல்வில் ஓரி" என்னும் வள்ளல் அவ்விருவருக்கும் முன்னரே பகைவனுய் இருநதாஞதலால் அவனுடைய கொல்லிமலையை வென்று கைக்கொள்ளவேண்டும் என முடிவு செய்தனர். மலையமானும் சேர மன்னனும் ஒருமித்துக் கொல்லிமலையை முற்றுகையிட்டனர். இச்செய்தியை அதியமானுக்கு வல்வில்லோரி சொல்லியனுப்பினுன். அதியமான் பகைவேந்

தரை முறியடித்து அழிக்கக் கருதித் தனக்குத் துணையாக வந்து உதவி செய்யுமாறு சோழ, பாண்டியருக்குச் செய்தி யனுப்பினன். அவரும் விரைந்து துணை புரிய வந்தனர். கொல்லிமலையை முற்றுகையிட்டிருந்த சேரமன்னனையும், மலையமானையும் வளைத்துக் கொண்டனர்.

சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை மிக்க வலி யுள்ள பெரும் படையோடு வந்திருந்ததினால் சோழபாண் டியரையும் அதியமானையும், எளிதிலே வென்றான். மலைய மானும் சேரனும் கொல்லிமலைக்குத் தலைவனாகிய வல்வில் ஓரியைப் போர்க்களத்திலே கொன்றனர். கொல்லிமலை சேரன் வசமாயிற்று. இந்நிலையைக் கண்ட அதியமான் காலமும், இடமும், தனக்குத் துணை செய்யாததைக் கருதி விரைவாகத் திரும்பிச் சென்று தன் தகடூர்க் கோட்டையுள் மறைந்திருந்தான். மலையமானும் சேரமன்னனும் தொடர்ந்து பின் சென்று தகடூர்க் கோட்டையை முற்று கையிட்டனர். அதியமான் யாது செய்வதென்றறியாது திகைத்தான். தன்னுடைய ஆற்றலை வெளிப்படுத்த இயலாமையை நினைத்து வருந்தினன்; போர் தொடங் குவதற்கு யாரைத் துணையாக நாடலாம் என ஆராய்ந்து கொண்டிருந்தான்; அதியமான் இவ்வாறு கோட்டையை அடைத்துக் கொண்டு உள்ளிருத்தல் அவனுக்கு மிகுந்த அவமானத்தைத் தருதலோடு பழியையும் பாவத்தையும் கொடுக்கும் என ஔவையார் எண்ணினர். தம்மாற் புகழ்ந்து பாராட்டப்படும் மன்னன் பிறர் பழிக்குமாறு அஞ்சி மதிலுள் அடைத்துக் கிடத்தல் தக்கது அன்று என அவர் எண்ணினர்; அதியமானுக்கு வந்த பழியும், அவமானமும் தமக்கு வந்ததாக நினைத்து வருந்தினர்; முன்வேற்று நாட்டில் இருந்து போரிட்டதால் அதியமான் தோல்வி எய்தினன். இப்பொழுது அவன் தன் நாட்டில் இருந்து போரிட்டால் அவனுக்கு வெற்றி திண்ணமாகக்

கிடைக்கும்; எனவும் கருதினர். அதியமான் தன்னுடைய ஆற்றலையும் படை வலிமையையும் உணராது வீணே அஞ்சிக் கிடக்கின்றான் எனவும் நினைத்தார். அதனால் அதியமானிருந்த இடத்தை அடைந்து அவனுக்குப் போரின் மீது விருப்பம் மிகுமாறு சில நல்லுரைகள் பகர்ந்தார்; ஊக்க மூட்டினர்.

### மன்னனைப் போர்மேற் செல்லத் தூண்டுதல் :

வெண்காந்தள் பூவுடன் மலைமல்லிகை மலர்ந்து விளங்கும் மலைப்பக்கத்தில் சினங் கொண்டபுலி சீறுமானல் எதிர்த்து நிற்கும் மான் கூட்டமும் உண்டோ? ஞாயிறு தோன்றுமானல் வானத்திலும், திசைகளிலும், இருள் தங்குதலும் உண்டோ, நிறைந்த சுமையையுடைய வண்டிகளை இழுத்துச் செல்லும், எருதுகள் வழியில் மணலும், கற்களும் கிடந்தாலும் அவற்றால் தடைப்பட்டு நிற்றல் இல்லை. பல துறைவழிகளாலும் முயன்று செல்லும். நீ முழந்தாள் வரையிலும் நீண்டுள்ள பெரிய கைகளை யுடையவன், தவருத கொடைத் தன்மையுடையவன்; வீரர்களுக்குத்தலைவன். நீ போர்க்களத்திலே புகுவாயானல் பல நாடுகளையும் கைக்கொண்டு ஆரவாரிக்கும் மன்னர்களும் உன் எதிரில் நிற்பார்களோ? என்ற கருத்துரைகளை எடுத்துக் கூறினர்.

ஔவையார் கூறிய வீர மொழிகளைக் கேட்டு அதியமான் போர்க்கோலம் பூண்டு வெளியே வந்தான்; போர்க்களத்திலே தன்னுற்றல் புலப்படுமாறு வீரப் போர் புரிந்தான்; அவனுடைய வாளுக்கு இரையாகி வீரர் பலர் மாண்டனர். பகைவேந்தருடைய படைகளும் அதியமானுடைய முகத்திலும் மார்பிலும் பட்டு விழுப்புண்களையுண்டாக்கின, வீரர்க்கு விழுப் புண்கள் சிறந்த

பரிசுகளாகும். உண்மைவீரர் போர் முகத்தில் படும் விழுப் புண்ணை விரும்பி ஏற்பர், "விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்கும்தன் நாளை யெடுத்து" என்பது வள்ளுவர் வாக்கு.

ஔவையார் போர்க்களத்திலும் சென்று அதியமானுக்கு மேலும் போரில் ஊக்கம் உண்டாகுமாறு சில நல்லுரைகளைக் கூறினர். போர்க்களம் புகுந்த அதியமான் பகை வேந்தருடைய நிலைக்குச் சிறிதும் பின்னிடாதவனாய் மான் கூட்டத்துள் புகுந்த புலி போலப் போர் புரிந்தான். எனினும் சேரமன்னன் விடுத்த கணையொன்று இறுதியாக அதிகமானுடைய நெஞ்சில் புகுந்து உயிரைக் கவர்ந்தது, போர்க்களத்தில் தேர்மேல் நின்ற அதியமான் ஆவி சோர்ந்து வீழ்ந்தான். பின்னர் ஔவையார் முதலிய புலவர் பெருமக்களும் அவன் ஆருயிர் நண்பர்களும் சுற்றமும் சூழ்ந்து பலவாறு அவனைப் பற்றிப் புகழ்ந்தனர். அவனுடைய பிரிவினை நினைத்து வருந்திப் பல பாடல்களை இயற்றினர்.

*அதியமான் இறந்தபின் ஔவையார் வருந்துதல்:*

அதிகமான் உயிரோடு இருந்த காலத்தில் தங்களுக்குச் செய்த நன்மைகளையும், அவன் இறந்ததனால் தங்களுக்கு ஏற்பட்ட துன்ப நிலையையும் எடுத்துச் சொல்லி வருந்துவாராயினர். ஔவையார் இயற்றிய செய்யுள் பலவும் கேட்பவர் உள்ளத்தை உருக்கும் தன்மையன. அவற்றுள் ஒன்றன் கருத்தினை ஈண்டுக் காண்போம்.

"சிறிய அளவில் மது கிடைக்குமானால் புலவர்களாகிய எங்களுக்குக் கொடுத்து உண்டு மகிழும்படி செய்வான். அது இப்பொழுது கழிந்தது. மிகுந்த அளவினையுடைய மது கிடைத்த போது எங்களுக்குக் கொடுத்து உண்ணும்

படி செய்வான். அவ்வாறு உண்டு மகிழ்ச்சியால் யாங்கள் பாடும்போது தான் மகிழ்ந்து உண்ணுவான். அது நீங்கிற்றே; உண்ணும் உணவு சிறிதளவாயினும், மிகுந்த அளவில் இருப்பினும் பலரையும் அழைத்துத் தன்னுடன் வைத்து உண்பித்துத் தானும் உண்ணுவான்; அது சென்றதே; நல்ல சுவையுள்ள உணவு கிடைத்த போது அவற்றை எமக்கு அளிப்பான்; அம்பும்,வேலும் கொண்டு போரிட வேண்டிய இடமெல்லாம் தானே சென்று நிற்பான்; அது நீங்கிற்றே; மலர் மணம் கமழும் தன் கையால் புலால் நாற்றம் வீசும் எம் தலையைத் தடவி அருளுவான்; அது நீங்கிற்றே; அவன் உயிரைக் கவர்ந்தவேலானது அவன் மார்பில் மட்டும் தைத்தது அன்று; அதனுடன் பாணருடைய கையிலுள்ள பாத்திரத்தைத் துளைத்து அதனை ஏந்திய அவர் கையையும் துளைத்தது ; அப்பாணருடைய சுற்றத்தாரின் கண்மணியின் ஒளி மழுங்குமாறு செய்துள்ளது. ஆராய்ச்சி வன்மையுடைய புலவர் நாவிலும் ஊடுருவித் தைத்தது. எங்களுக்குப் பற்றுக் கோடாய் இருந்த அதியமான் இப்பொழுது எவ்விடத்தில் இருக்கின்றானோ? இனி இவ்வுலகில் சிறந்த செய்யுட்களைப் பாடுவாரும் இல்லை. பாடுவோருக்கு ஒன்று ஈவாரும் இல்லை. நீர்த் துறையில் மலர்ந்த பகன்றைப்பூ பிறராற் சூடப்படாது வீணுவது போல, பிறர்க்கு ஒரு பொருளையும் கொடாது அழிந்து போகும் உயிர்களும் இவ்வுலகிற் பல உள்ளன." என மனம் உருகிப் பாடினார்.

பொகுட்டெழினுக்குத் துணை:

அதியமானைப் பிரிந்து வாழும்நாட்கள் ஔவையார்க்கு மனத்துயரைத் தந்தன. அதனால் வாழ்வில் வெறுப்புற்ற ஔவையார் அதியமானுடைய புகழ் நிலைபெறுமாறு சில செய்யுட்களை இயற்றி அவனுடைய பண்புகளை உலகறியச் செய்தார். அதிமானுடைய மகன் பொகுட்டெழினி முடி

சூட்டிக்கொண்டு நாட்டாட்சியை மேற்கொண்டான் ஔவையார் அவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கிப் பின்னரும் சிலஆண்டுகள் தகடூரில் தங்கியிருந்தார்; இளைஞனாகிய பொகுட்டெழினுக்கு நல்லுரைகள் கூறி ஆட்சித் துறையில் அவனை மேன்மையடையுமாறு செய்தார்.

*நாஞ்சில் வள்ளுவன் தந்த பரிசில் :*

ஔவையார் தமிழ் நாட்டிலுள்ள பிற மன்னர்களையும், இயற்கைக் காட்சிகளையும், மக்களுடைய பண்பு மேம்பாடுகளையும் காணவேண்டும் என்ற எண்ணத்தினால் தகடூரினின்றும் நீங்கி நாஞ்சில் நாட்டை நோக்கிச் சென்றார். வள்ளுவர் குடியிற் பிறந்த நாஞ்சில் வள்ளுவன் என்னும் மன்னன் அக்காலத்து நாஞ்சில் நாட்டை ஆண்டுவந்தான். அவன் சிறந்த படைவலியுடையவன்; புலவர்க்கு வரையாது கொடுக்கும் வள்ளல்; அவனிடம் ஔவையார் சென்று தம் சுற்றத்தார் பக்குவமாகச் சமைக்கும் கீரைக்கறிக்கு மேலிடும் பொருளாகச் சிறிதளவு அரிசி வேண்டும் எனக்கேட்டார். நாஞ்சில் வள்ளுவன் வந்தவர் ஔவையார் என்பதை யுணர்ந்து, தன் பெருமைக்குத் தக்கவாறு பெரிய யானை ஒன்றைப் பரிசாக அளித்தான். கொடைவள்ளல்கள் எப்பொழுதும் தம் பெருமைக்குக் குறைவுவராதபடி மிகுதியாகவே கொடுப்பர். கேட்பவர் சிறிதளவே கேட்பினும் கொடுப்பவர் தம் தகுதிக்கேற்றபடி மிகுதியாகவே கொடுத்தல் முறை. கேட்பவர் கேட்கும் அளவுக்கு மேல் கொடுப்பதைக் 'கொடை மடம்' என்று கூறுதல் வழக்கம். மடம்-அறியாமை. பொருளின், அருமை அறிந்தும் அறியாதவர் போல மிகுதியாகக் கொடுத்தலால் கொடை மடம் எனப்பட்டது. ஔவையார் கேட்டது அரிசி. வள்ளுவன் கொடுத்தது வளமிக்க யானை. இது அரசனுடைய அறியாமையைப் புலப்படுத்துகிறது

பரிசில் பெற்ற ஔவையார் நாஞ்சில் வள்ளுவனு டைய கொடை மடத்தைக் கண்டு வியந்து ஒரு செய்யுள் இயற்றினர். அதன் கருத்து இங்கு அறியத்தக்கது :

"செந்நாப்புலவர்களே, பெரிய பலாமரங்கள் நிறைந்த நாஞ்சில் நாட்டுத் தலைவன் அறியாமையுடை யவன். வளையலணிந்த விறலியர் தோட்டத்திற் கொய்த இலைக்கறியாகிய கீரையைச் சமைக்கும்போது, அதற்கு மேலிடும் பொருளாக யாம் சிறிது அளவு அரிசி கேட் டோம். நாஞ்சிற் பொருநன் தன் பெருமையை நோக்கி, மலைபோன்ற பெரிய யானை ஒன்றைப் பிடித்துக் கொடுத் தான். இப்படிப்பட்ட அறியாமையுடைய கொடையும் உண்டோ? பெரியோர் தாம் செய்யக்கூடிய செயலை அறிந்து செய்யார் போலும்" என்பதாம்.

மூவேந்தர் ஒற்றுமை :

இவ்வாறு நாஞ்சில் வள்ளுவனுடைய கொடைத் திறத்தைப் புகழ்ந்த ஔவையார் அந்நாட்டினின்றும் வெளிப்போந்து பல வேறு நாடுகளையும் கண்டு மகிழ்ந்து சோழநாட்டை யடைந்தார். உறையூரில் சோழன் பெரு நற்கிள்ளி நடத்திய இராசசூய வேள்வியைக் கண்டார். அவ்விடத்துத் தமிழ்நாட்டு மூவேந்தரும் ஒற்றுமையுடை யவராய் ஒருங்கிருந்தனர். சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதியும், சோழன் இராயசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஆகிய மூவேந்தருமே அங்கிருந்தவர்.

தமிழ் நாட்டில் எக்காலத்தும் மூவேந்தர் ஒருவரோடு ஒருவர் பகைகொண்டு வெஞ்சமர் விளைத்தலே இயல்பா யிருந்தது. அதனை மாற்றுவார் போன்று மூவேந்தரும் ஒங்கிருருந்தது ஔவையாருக்குப் பெரிய மகிழ்ச்சியை

யும் வியப்பையும் அளித்தது. அதனால் அம்மூவேந்தர்க்கும் ஔவையார் அறிவுரையோடு கூடிய வாழ்த்துக்கூற விரும்பினர்.

"வானுலகத்தைப் போன்ற சிறப்புடைய நாடுகளை நீவிர் பெற்றீராயினும், தவத்தால் முதிர்ந்தவர்க்கே அவை உரிமையுடையனவாகும். அறவோராகிய அந்தணர்க்கு கைநிறையப் பூவும் பொன்னும் நீரோடு கொடுத்தல் வேண்டும்; தெளிந்த தேனையுண்டு மகிழ்ச்சியோடு வாழ வேண்டும்; இரந்து கேட்போர்க்கும் செல்வப் பொருளைக் குறைவின்றி வழங்குதல் வேண்டும். இவ்வுலகத்து வாழுங்காலத்து நீங்கள் செய்த நல்வினையல்லது உங்களுக்குத் துணையாவது வேறு ஒன்றும் இல்லை. அந்தணர் வளர்க்கும் செந்தழலாகியமூன்று தீக்களும் மங்கலமுடையனவாகக் காண்பவர்க்கு மகிழ்ச்சியூட்டுமாறுபோல நீங்கள் பொலிவு பெற்றுக் காணப்படுகின்றீர்கள். இப்பெருமை என்னால் அளந்து கூறும் தகுதியுடையதாகுமோ? வானத்தில் விளங்குகின்ற விண்மீன்களையும், ஒலியோடு வீழும் மழைத்துளிகளையும்விட மேம்பட்டு நுங்கள் வாழ்நாள் பெருகி விளங்குவன வாகுக." என வாழ்த்தினர். ஔவையாருடைய வாழ்த்து மொழிகளைப் பெறும் வாய்ப்புப் பெற்றமையை நினைத்து மூவேந்தரும் மகிழ்ந்தனர், சோழமன்னன் ஔவையாருக்குப் பெரும் பொருளைப் பரிசிலாக அளித்தான்.

*பாண்டிய நாட்டை அடைதல்:*

ஔவையார் உறையூரினின்றும் நீங்கிச் சோழநாட்டிலுள்ள பல இடங்களையும் கண்டு மகிழ்ந்து பாண்டிய நாட்டை அடைந்தார். பாண்டிய நாட்டின் தலை நகரமாகிய மதுரையில் சிறப்போடு விளங்கிய தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்து புலவர்களோடு மகிழ்ந்து உறைந்தார். தமிழ்

மொழியின் வளர்ச்சிக்காக அவர்கள் இயற்றும் பணிகளைக் கண்டு வியந்தார்.

செந்தமிழ்ப் பாண்டி நாட்டு மக்களின் மொழி வளத்தையும், பண்பு மேம்பாட்டையும் கண்டு வாழ்த்தினார்; தாம் சென்ற இடங்களில் அறிவான் முதிர்ந்தோருடைய அடக்கத்தைக் கண்டு மகிழ்ந்தார். அறிவில்லாதோர் புகழ்பெறச் செய்த சூழ்ச்சிகளைக் கண்டு அவர்க்குச் சொல்ல வேண்டிய நல்லுரைகளைக் கூறி அவர்களை நல்வழிப்படுத்தினார்.

தமிழ் நாட்டில் வாழ்ந்த எளிய மக்களுக்கு உதவிய பேகன் முதலிய பெருவள்ளல்களைப் பாராட்டினார்; பாரி வள்ளல் மூவேந்தரால் இறந்த பின்னர் அவன் மகளிர் இருக்கும் இடம் யாது எனக் கேட்டு அவ்விடத்தை அடைந்தார்; அவர்கள் நிலையைக் கண்டு வருந்தினார்; அவர்களால் இடப்பட்ட இலைக்கறியமுதினை உண்டு மகிழ்ந்தார்; அவர்கட்கு வாழ்வு வளம் பெற வாழ்த்தினார்; இங்ஙனம் பல நாடுகட்கும் சென்று ஆங்காங்கு சிறந்த தமிழ்ச் செய்யுட்களை இயற்றி மக்களுக்கு நல்லறிவு புகட்டி நீண்ட நாள் வாழ்ந்தார்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று"

## பயிற்சி :

1. "முரசு கட்டிலில் மோசிகீரனர்"—என்ற பொருள் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
2. மன்னன் வரி வாங்கும் முறை பற்றிப் பிசிராந்தையார் கூறியன யாவை?
3. அன்னச் சேவலை நோக்கிப் புலவர் கூறியனுப்பிய செய்தி யாது?
4. "கோப்பெருஞ் சோழனும் வடக்கிருத்தலும்"—என்ற பொருள் பற்றி ஒன்றரைப் பக்கத்தில் ஒரு கட்டுரை எழுதுக.
5. "கபிலர் இளமைப் பருவ நிகழ்ச்சிகள்"
"பாரி மகளிரைப் பாதுகாத்த கபிலர்"
"மூவேந்தர் முற்றுகை"—இவற்றுள் எவையேனும் இரண்டு பற்றி ஒவ்வொன்றும் ஒன்றரைப் பக்கத்தில் அமையுமாறு கட்டுரை வரைக.
6. சோழன் நலங்கிள்ளி கூறிய வஞ்சின மொழிகள் எவை?
7. "புலவர் இளந்தத்தனர் சிறைமீட்சி" என்பது பற்றி ஒன்றரைப் பக்கத்துள் கட்டுரை எழுதுக.
8. "மலையமான் மக்களும். கோவூர் கிழாரும்" என்பது பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
9. பரிசில் பெருத ஔவையார் வாயிற் காவலனிடம் சினந்து கூறியன யாவை?
10. "ஔவையாரும் நெல்லிக் கனியும்"
"ஔவையார் தொண்டைமான்பால் தூது செல்லல்"
என்ற பொருள் பற்றி இரண்டு கட்டுரைகள் எழுதுக.
11. அதியமான் பெருமையை ஔவையார் எங்ஙனம் பாராட்டினர்?
12. நாஞ்சில் வள்ளுவனுடைய கொடை மடத்தை ஔவையார் எங்ஙனம் பாராட்டிக் கூறினர்?